முதற்பதிப்பு: ஆகஸ்டு 15, 1958
(விடுதலை நாள் வெளியீடு)

இரண்டாம் பதிப்பு, பிப்ரவரி, 1961



## ஆசிரியரின் மற்ற நூல்கள்

இலக்கியம்:

சங்க காலச் சான்றோர்கள்
காற்றிலே மிதந்தவை
சிலப்பதிகார விருந்து
கவிஞர் தரும் காட்சி
உணர்வின் எல்லை

வரலாறு:

1806
இரு பெருந்தலைவர்
தமிழகத்தில் விடுதலை வேள்வி
வெள்ளையர் கண்ட வீரத் தமிழகம்
மானங்காத்த மருது பாண்டியர்
மருதிருவர்
வேலூர்ப் புரட்சி

---

முத்தமிழ் அச்சகம், காஞ்சிபுரம்.

# 'கலைமகளி'ன் கருத்து

இந்தியாவில் சுதந்தரப் போர் வடக்கே 1857ல் தொடங்கியதென்று அண்மையில் நூற்றுண்டு விழா வைக்கூடக் கொண்டாடினேம். அதற்கு முன்பே தமிழ் நாட்டில் வீரபாண்டியக் கட்டபொம்மன் ஆட்சியாளரை எதிர்த்துப் போரிட்ட வரலாற்றை நாம் அறிவோம். அவருக்கு முன்பே மற்றொரு வீரர் சுதந்தர உணர்ச்சி யுடன் போராடியதை அன்பர் திரு. ந. சஞ்சீவி ஒரு கட்டுரை யில் எடுத்துக் காட்டுகிறார். பூலித்தேவர் என்ற வீர ருடைய வரலாற்றின் ஒரு பகுதி இவ்விதழில் வருகிறது. தமிழ் நாட்டு வரலாற்றுக்குக் கருவியாக அங்கங்கே மறைந்துள்ள ஏடுகளைத் தேடி ஆராய்ந்தால் இது போன்ற பல அரிய உண்மைகள் கிடைக்கும்.

—பிப்பிரவரி, 1958.

* * *

தமிழ் நாட்டு வரலாற்றை இன்னும் தக்கவண்ணம் ஆராய்ந்து வெளிப்படுத்தும் முயற்சியையாரும் தொடங்க வில்லை. பாரத அரசாங்கம் இந்திய வரலாற்றை நல்ல முறையில் உருவாக்க ஆவன செய்து வருகிறது. அதில் தமிழ் நாட்டு வரலாறும் வரும். ஆனல், அது போதாது. தமிழ் நாட்டின் வரலாறு விரிவானது. பாரத நாட்டில் வழங்கும் மொழிகளுள் மிகப் பழைய மொழி தமிழ். அதன் இலக்கியத்தின் பழமையும் அத்தகையதே. ஆகவே, பழந்தமிழ் நாட்டு வரலாற்றை ஆராய்வதற்கு ஏற்ற பழைய இலக்கியங்கள் பல இருக்கின்றன. சரித் திர காலத்தில் வரன்முறையாக வரலாற்றை யாரும் எழுதி வைக்காவிட்டாலும், தமிழ் நாட்டுச் சரித்திரத்

தின் ஏடுகள் என்று சொல்லத்தகும் கல்வெட்டுக்கள் தமிழ் நாட்டில் ஆயிரக் கணக்கில் இருக்கின்றன. ஊர் தோறும் கோயில்களைப் பெற்ற தமிழ் நாட்டில், கோயில் தோறும் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவற்றைக் கொண்டு பிற்கால வரலாற்றை விரிவாக எழுதலாம். நம்முடைய சென்னை அரசாங்கம் தனியே இத்துறையில் ஊக்கத்தை மேற்கொண்டு, முதன்முதலில் கருவிகளைத் தொகுக்கச் செய்து, விரிவான வரலாற்றை உருவாக்கும் வகையைத் திட்டமிட வேண்டும்.

அன்பர் திரு. ந. சஞ்சீவி பூலித்தேவரைப்பற்றி எழுதியிருக்கும் கட்டுரை இத்தகைய எண்ணங்களை உண்டாக்கியது. பட்டாக்காரர்கள், பாளையக்காரர்கள், நாட்டாண்மைக்காரர்கள், வேளிர்கள், குறுநில மன்னர்கள் என்று தமிழ் நாட்டில் அங்கங்கே வாழ்ந்து பல அரிய வீரச் செயல்களைச் செய்தும் வண்மைச் செயல் புரிந்தும் வாழ்ந்தவர்களுடைய வரலாற்றைத் தொகுத்தால் எவ்வளவோ அரிய நிகழ்ச்சிகளை அறியலாம். பூலித்தேவரின் வரலாற்றின் பிற்பகுதியை இவ்விதழில் காணலாம்.

—மார்ச்சு, 1958

* * *

# முன்னுரை

'தன்னேர் இலாத தமிழ்' போல, வீரத்தலைவர் பூலித்தேவர் வரலாறும் தனிச் சிறப்பு வாய்ந்தது. இவ்வுண்மையை உலகிற்கு விளக்கமாய் எடுத்துக் காட்டும் அரிய வாய்ப்பு முதன்முதலாக எனக்குக் கலைமகள் (ஹேவிளம்பி—மாசி, பங்குனி) இதழ்கள் வாயிலாகக் கிடைத்தன. அக்கட்டுரையைப் படித்த அன்பர் பலர் என்னைப் பாராட்டி வாழ்த்தினர்; நேரிலும் கடிதம் வாயிலாகவும் தமது பேருவகையைப் புலப்படுத்தினர். அவர்களுள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர் பூலித்தேவர் பிறந்த ஊராகிய நெற்கட்டுஞ்செவ்வலின் கிராம அதிகாரியாய் இப்போது விளங்கும் திரு. கிருஷ்ணன் அவர்களே. நன்றி உணர்ச்சி பொங்க அவர் 22-3-'58ல் வரைந்தனுப்பிய கடிதம் என் உள்ளத்தைப் பெரிதும் உருக்கிவிட்டது!

இவ்வாறு அன்பர் பலர் அளித்த ஊக்கத்தின் விளைவாக எழுந்ததே 'வீரத்தலைவர் பூலித்தேவர்' என்னும் இவ்வாராய்ச்சி நூல். இந்நூலின் முற்பகுதியில் கலைமகள் இதழ்களில் வெளிவந்த கட்டுரை இன்னும் சற்று விரிவாக்கப் பெற்று வெளியிடப் பெற்றுள்ளது. அடுத்துள்ள இணைப்பு உ-ல் பூலித்தேவர் வரலாற்றிற்கு ஆதாரமாய் அமைந்துள்ள ஆங்கிலப் பகுதிகளைக் காணலாம். தொன்மைச் சிறப்பும் வரலாற்றுப் புகழும் வாய்ந்த அரிய பெரிய நூல்களினின்றும் அகழ்ந்தெடுக்கப்பெற்ற இப்பகுதிகள் கற்பார்க்குக் கழிபேருவகை ஊட்ட வல்லன. இவ்வாங்கிலப் பகுதிகளின் கருத்தைத் தமிழ் மொழி ஒன்றையே அறிவாரும் கற்று மகிழ அமைந்ததே இணைப்பு—க. இறுதியாய் அமைந்துள்ளது

'ஆராய்ச்சிக் குறிப்புக்கள்' என்னும் பகுதி. நூலினுள் காணப்படும் அடிக்குறிப்பு எண்களுக்கு உரிய ஆராய்ச்சிக் குறிப்புக்களை இப்பகுதியில் காணலாம்.

இந்நூலை வெளியிடும் இந்நேரத்தில் இருநூறு ஆண்டுகளாய் மறைந்து கிடந்த ஒரு மாவீரரின்—தமிழ்ப் பெருமகனாரின் தலைசிறந்த வரலாற்றை முதன்முதலாக நூலுருவாக்கித் தமிழ் மக்களுக்கு அளிக்கும் பெரும் பேற்றினையும் எனக்கு வழங்கிய தமிழன்னையின் திருவருளை வாழ்த்தி வணங்குகின்றேன்! 'வீரத்தலைவர் பூலித்தேவர்' பற்றிய என் கட்டுரைகளை அழகிய படங்களுடன் கலைமகள் இதழ்களில் வெளியிட்டு என்னை ஊக்கி உலகறிய வாழ்த்திய உத்தமர் கி. வா. ஜகந்நாதன் அவர்கட்கு என் உளமார்ந்த நன்றியறிதலை இச்சந்தர்ப்பத்தில் மிக்க மகிழ்வோடும் பணிவோடும் தெரிவித்துக் கொள்கிறேன. வழக்கம் போல என்னுடைய இந்நூலையும் செப்பம் செய்து உதவிய ஆசிரியப் பெருந்தகை மகாவித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கட்கு என் உளங்கனிந்த நன்றி உரியது.

'வெள்ளையனே, வெளியேறு!' என்று காந்தி அடிகள் (ஆகஸ்டு 9, 1942ல்) முழங்கியதும் அவர்தம் அறவொலியைக் கோடானுகோடி இந்திய மக்கள் எதிரொலித்து விண்ணதிர—வெள்ளையர் மனமதிர—முழங்கியதும் இவ்வாகஸ்டு திங்களிலேதான். அதன் பயனாக ஐந்து ஆண்டுகளில் பாரதநாடு விடுதலை பெற்றதும் இவ்வாகஸ்டு திங்களிலேயே (15-8-1947) இவ்விரு பெருநாட்களின் நினைவாக 'வெள்ளையனே, வெளியேறு!' என்று இருநூறு ஆண்டுகட்கு முன் வாளெடுத்து முழங்கிய வீரத்தலைவர் பூலித்தேவரின் புனித வரலாற்றைத் தமிழ் மக்களின் திருக்கரங்களுக்கு முதன்

முதலாக நூல் வடிவில் காணிக்கையாக்குவதில் பெருமை கொள்கிறேன்!

வீரத்தலைவர் பூலித்தேவர் பெயரால் மன்றங்களையும், படிப்பகங்களையும், உடற்பயிற்சி நிலையங்களையும், வேறு பல நினைவுக் கோயில்களையும் எழுப்பி அப்பெருவீரரின் விழுப்புகழைப் பட்டி தொட்டிகளில் எல்லாம் பரப்ப ஆவல் கொண்டுள்ள அருந்தமிழ் மக்கட்கு இந்நூல் பெருந்துணை புரியும் என்று நம்புகிறேன்.

**வாழ்க வீரத்தலைவர் பூலித்தேவர் புகழ்!**

**ந. சஞ்சீவி,**
15-8-1958.

# துணை கொண்ட நூல்கள்


1. குரு குஹதாசப் பிள்ளை, எஸ். — *திருநெல்வேலிச் சீமைச் சரித்திரம்* (1931)
2. சாமிநாத ஐயர், உ. வே. — *சங்கரநயினர் கோயில் அந்தாதி* (1934)
3. சிரஞ்சீவி — *வீரபாண்டியக் கட்ட பொம்மன்* (1958)
4. சிவஞானம், ம. பொ. — *வீரபாண்டியக் கட்ட பொம்மன்* (1949)
5. சுப்பிரமணியம், தி. நா. — *கட்டபொம்மு*
6. சென்னை அரசாங்க வெளியீடு — *சுதந்தரச் சுடர்* (1957)
7. சென்னைப் பல்கலைக் கழகம் — *தமிழ்ப்பேரகராதி தொகுதிகள் 3, 5.*
8. ஜெகவீரபாண்டியனர் — *பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம்* (1950)
9. Caldwell — *History of Tinnevelly* (*1881*)
10. Dodwell, H. H. — *Ananda Ranga Pillai Diary, Vol. XI* (*1928*)
11. Hill, S. C. — *Yusuf Khan.*
12. Pate, H. R. — *Tinnevelly gazetteer* (*1917*)
13. Robert Orme — *History of Military Transactions of the British Nation in Indostan* (*1861*)
14. Robert, P. E. — *History of British India.*
15. Srinivasa-chari, C. S. — *Ananda Ranga Pillai* (*1940*)
16. Vibart, H. M. — *The Military History of the Madras Engineers (Vol. I—1881.)*

**வரலாற்றுப் பேரறிஞர்**

*பேராசிரியர் உயர்திரு.*

**சி. எஸ். சீனிவாசாசாரியார், அவர்கள்**

(காஞ்சீபுரம் பச்சையப்பர் கல்லூரி முதலாண்டுத் தலைவர்)

**அன்பு நினைவுக்கு**

# வீரத் தலைவர் பூலித்தேவர்

வீரபாண்டியக் கட்ட பொம்மன் விடுதலைப் போரைத் தொடங்குவதற்கு நாற்பத்து நான்கு ஆண்டுகட்கு முன்பே தமிழகத்தில் விடுதலைப்போர் தொடங்கிவிட்டது. தமிழக வரலாற்றைத் துருவி ஆராய்வார் இவ்வுண்மையை உணர்தல் உறுதி.[1] அவ்வாறு வெள்ளை ஆட்சியை வேரறக் களையப் போர்க்கொடி உயர்த்திய புண்ணியர்களுள் தலை சிறந்தவர் பூலித்தேவர். போர் நுட்பங்களிலும் அரசியல் நுட்பங்களிலும் இணையற்ற அறிவும் ஆற்றலும் படைத்து விளங்கிய அப்பெருமகனாரைப் பற்றி இப்போது கிடைக்கும் குறிப்புக்களைத் தொகுத்து ஒருருவாக்கி ஆராய்வதே நம் முதன்மை யான நோக்கம். இதன் பயனாகப் பூலித்தேவரைப் பற்றிய வேறு பல செய்திகளும் உண்மைகளும் விளக்கம் பெறுமாயின், அது தமிழன்னையின் உள்ளத்தைப் பெரிதும் குளிர்விப்பதாகும்.

18-ஆம் நூற்றாண்டில் தமிழகம் எட்டுத் திக்கிலும் பற்றி எரியும் தீவாய்ப்பட்ட எழில் மிக்கதோர் அரண்மனையாய்க் காட்சி அளித்தது. எரிந்து கொண்டிருந்த அவ்வரண்மனையில் பிடுங்கிய வரையில் ஆதாயம் என்று ஊர்ப்பிடாரிகளும் ஒண்டவந்த பிடாரிகளும் கருதின. நாளடைவில் ஒண்ட வந்த பிடாரிகள் ஊர்ப்பிடாரிகளையும் கொன்று விழுங்கிப்

பின் ஏகாதிபத்தியம் என்னும் கோரக் கூத்தாடின. சுருங்கச் சொன்னால், இதுவே இருநூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகத்தின் இருள் சூழ்ந்த அவலம் நிறைந்த இரங்கத்தக்க நிலை என்னலாம்.

இருநூறு ஆண்டுகளாகத் தமிழகத்தில் பெரும் புகழுடன் விளங்கிய மதுரை நாயக்கமன்னர் ஆட்சி சந்தா சாகிபுவின் சதியால் அரசி மீனாட்சியின் தற்கொலையோடு கி. பி. 1736ல் முடிந்து போயிற்று. இதன் பின்னர்த் தமிழகத்தில் தடி எடுத்தவன் எல்லாம் தண்டற்காரன் ஆயினன். சிறப்பாகத் திருநெல்வேலிச் சீமையின் திறைப் பணத்தை வாங்க மகாராட்டிரர்கள் தங்கள் அதிகாரிகள் வாயிலாக முனைந்தார்கள். 1744-ஆம் ஆண்டில் அன்வர் உத்தீன் கர்நாடகத்தின் நவாபுவாக்கப் பட்டதும் அவன் அதிகாரிகளும் திருநெல்வேலிச் சீமையை நோக்கிப் பணம் பறிக்கப் பயணப் பட்டார்கள். ஆம்பூர்ப் போரில் அன்வார் உத்தீன் கொலையுண்டான். அதன் விளைவாக முகம்மது அலி ஆர்க்காட்டு நவாபுவாகப் பிரகடனம் செய்யப் பட்டான். அரசுரிமை பெற்ற முகம்மது அலி, கி. பி. 1751ல் திருநெல்வேலிச் சீமையில் கப்பப்பணம் வசூலிக்கத் தன் உடன் பிறந்தானாகிய அப்துல் ரஹீமைப் படை திரட்டிச் செல்ல ஆணையிட்டான். ஆனால், அப்படையெடுப்பால் பாளையக்காரர்களிட மிருந்து தம்படிகூடப் பெயரவில்லை.

இந்நிலையில் சந்தாசாகிபு முகம்மது அலிக்குப் போட்டியாகப் பாளையக்காரர்களைத் தன் பக்கம்

சேரும்படியும், சேர்ந்தால் பழம்பாக்கிகளை எல்லாம் ரத்துச் செய்வதாகவும் நாளும் நயவுரைகள் பகர்ந்து வந்தான். இதையொட்டிச் சந்தாசாகிபுவின் நண்பனை ஆலம்கான் மதுரையைக் கைப்பற்றித் திருநெல்வேலிச் சீமையில் கப்பம் வசூலிக்கத் தொடங்கினான். இவற்றையெல்லாம் பார்த்துப் பதறிய ஆர்க்காட்டு நவாபு கிழக்கிந்தியக் கும்பினியின் கருணைக்கு மனுப்போட்டான். அத்தகைய சந்தர்ப்பத்தையே எதிர்பார்த்திருந்த கும்பினியும், கர்னல் ஹீரான் என்பவனை உதவிக்குக் கொடுத்தது. ஆர்க்காட்டு நவாபுவின் அண்ணன் மாபூஸ்கான்,[2] கர்னல் ஹீரான்,[3] கான்சாகிபு[4] ஆகியோர் தலைமையில் படை புறப்பட்டது. கர்னல் ஹீரான் என்ற வெள்ளையனை முக்கியத் தளபதியாகக் கொண்டு, கி. பி. 1 55ல் நடைபெற்ற இப்படையெடுப்பே சுதந்தர தாகம் கொண்டிருந்த தென்சீமைகளை அடக்க எழுந்த முதற்பெரும்படையெடுப்பு.[5] இரண்டாயிரம் சிப்பாய்களையும் ஐந்நூறு ஐரோப்பியர்களையும் கொண்ட இப்படையெடுப்பு, தென்திசை நோக்கிச் சென்றிருந்த போது, இடைக்காலத்தில் ஆலம்கானால் பிடிக்கப்பட்டிருந்த மதுரை மாநகர், மியானா, மூடேமியா, நபிகான் என்ற மூன்று பட்டாணியர் வசம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. இப்பட்டாணியர்கள், 'ஆடவர்' எனப் பெயர் கொண்டு திரிந்த பேடிகள்; காசாசை கொண்ட கயவர்கள்; பணப்பித்துக் காரணமாக நாடு நகர், கோட்டை கொத்தளம் எல்லாவற்றையும் விற்கத் துணிந்தவர்கள். அதன் விளைவாகவே அந்நாளில் திருவாங்கூரை ஆண்ட மார்த்தாண்ட வர்மருக்குக் கன்னியா

குமரிக்கு மேற்கே முப்பது மைல் விரிவுள்ள நிலப் பகுதியும் அப்பகுதியில் இருந்த கோட்டை கொத்தளங்களும் ஒருங்கே கிடைத்தன.

[6]இரண்டாயிரம் சிப்பாய்களையும் ஐந்நூறு ஐரோப்பியர்களையும் கொண்ட கர்னல் ஹீரான் படை வரும் செய்தி கேட்டதும், பட்டாணியர்கள் இருந்த இடம் தெரியவில்லை. மதுரை மாநகரம் கும்பினிப் படையிடம் சிக்கியது. மதுரையைப் பிடித்ததும் மமதை கொண்ட கும்பினி நவாபு பட்டாளம் தென்பாளையங்களில் கப்பப்பண வேட்டையில் இறங்கியது; பாளையக்காரர்களை மிரட்டியது; உருட்டியது.

[7]அந்நாளில் திருநெல்வேலிச் சீமை ஒரு வகையில் இரு வேறு பிரிவாய் இருந்தது. அப்பிரிவுகள் 'கீழ்த்திசைப் பாளையங்கள்' என்றும், 'மேற்றிசைப் பாளையங்கள்' என்றும் பெயர் பெற்றன. கீழ்த்திசைப் பாளையங்களுக்குத் தலைமை தாங்கியவர் பாஞ்சாலங்குறிச்சியின் பாளையக்காரர் பொல்லாப் பாண்டிய நாயக்கர் என்பவர். இவரே புகழ் பெற்ற வீரபாண்டியக் கட்டபொம்மன் பாட்டனார். இவர் பாஞ்சாலங்குறிச்சியில் (கி. பி. 1736 முதல் கி. பி. 1760வரை) இருபத்து நான்கு ஆண்டுகள் ஆட்சி புரிந்தார்.[7A] அப்போது மேற்றிசைப் பாளையங்களுக்குத் தலைமை தாங்கியவரே பூலித்தேவர்.[8] அந்நாளில் இவர் உறைவிடம் நெற்கட்டுஞ் செவ்வல்[9] என்று வழங்கப்பட்டது. இப்பொழுது சங்கரநயினார் கோயில் தாலூக்காவில் ஆவுடையாபுரம்[10] என்று வழங்கப் பெறுவதும் இவ்வூரே.

அந்நாளில் பாஞ்சைப்பதிக் கட்டபொம்முவும், நெற்கட்டுஞ்செவ்வல் பூலித்தேவருமே ஆர்க்காட்டு நவாபுவுக்கும் அவர் பெயரைச் சொல்லி நாட்டில் பீரங்கி வேட்டையாடத் துணிந்த வெள்ளையருக்கும் கண்களை உறுத்தும் கருவேலமுட்களாய்த் தோன்றினர்![11] ஆனால், இவ்விருவருள்ளும் கட்டபொம்முவைச் சிறந்த வீரர் என்று கூறுவதற்கு இல்லை. மாறாகப் பூலித்தேவர் தலைசிறந்த அரசியல் சாணக்கியராயும் நிகரற்ற போர் வன்மை படைத்த மறவர் சிங்கமாயும் திகழ்ந்தார்.[12]

வீரத்தலைவர் பூலித்தேவரின் பேரறிவையும் பேராற்றலையும் பிரிட்டிஷ் பேரரசின்பால் பத்தி கொண்டிருந்த வரலாற்று ஆசிரியர்களே வியந்து போற்றியிருக்கிறார்கள். எடுத்துக்காட்டாகப் பாஞ்சாலங்குறிச்சிச் சண்டைகள் உட்படத் திருநெல்வேலிச் சீமைச் சரித்திரத்தை வரைந்துள்ள எட்டையபுரத்தார் ஒருவரின் கருத்துரை ஈண்டு கருதற்குரியது. அவர் கூறுவதாவது:[13]

'நாம் பிரஸ்தாபிக்கும் சமயத்தில் நெற்கட்டுஞ் செவ்வல் பாளையப்பட்டுக்கு அதிபரான பூலித் தேவர் அஞ்சாத நெஞ்சம் படைத்தவர். இராணுவ முறையில் கைதேர்ந்தவர்களும் மெச்சும்படியான யுத்தப் பயிற்சியின் நுண்ணறிவையும், சைனியங் களின் நிதானங்களைக் குறிப்பினால் அளவிடும் சத்தியையும், சைனியங்களுக்கு உற்சாகத்தை ஊட்டும் வாக்கு வல்லமையையும், ஒரே நாளில் நாற்பது ஐம்பது மைல்கள் தூரம் யுத்தத் தளவாடங்கள்

சகிதம் களைப்பில்லாமல் நடக்கும் ஆற்றலையும் அவர் அடைந்திருந்ததுடன், பார்வைக்கு உயர்ந்து நிதான மான ஆகிருதியையும், பரந்து விசாலமான கண்களை யும், நெஞ்சையும், புயங்களையும், ஆஜானுபாகுவான கைகளையும், சிறுத்து நீண்ட விரல்களையும் உடைய வராய் இருந்தார் என்பது கர்ண பரம்பரை. சாமுத்திரிகா இலட்சணப்படி இவை அவருக்குப் பொருத்தமுடையனவாம்.'

இவ்வாறே ஆங்கிலேய வரலாற்று அறிஞர் பலர் மதிப்பீடும் அமைந்துள்ளது.[14]

தென்பாண்டிச் சீமை மீது 1755ல் புயலெனச் சீறிவந்த கர்னல் ஹீரான் படை முதலில் பாஞ்சாலங் குறிச்சியைத் தாக்கப் புறப்பட்டது. அப்பாளையத் தின் முக்கியக் கோட்டையான எல்லை நாயக்கன் பட்டியை அப்படை அடைவதற்குள் செய்தி பாஞ்சை நகருக்கு எட்டியது. அப்போது பாஞ்சாலங் குறிச்சியை ஆண்ட கட்டபொம்மு, கும்பினிக்கும் நவாபுவுக்கும் மாறாகப் போர் செய்ய இசையவில்லை; கப்பத்தைக் கட்டிவிடுவதாகவும், ஆயினும் தவணை தரவேண்டும் என்றும் வேண்டிக்கொண்டார்; தரவேண்டிய அத்தொகைக்காக ஆள் பிணை தருவதாகவும் ஒப்புக்கொண்டார். அதன்படி அவர் பணம் முழுவதையும் கொடுக்கும் வரையில் தமக்கு வேண்டிய முக்கியமான சிலரைக் கும்பினியாரிடம் பணயம் வைத்துப் பின்னர்ப் பணம் தந்ததும் மீட்டுக் கொள்ள வேண்டும் என்ற நிலை ஏற்பட்டது.[15]

பாஞ்சைப்பதிநிலை இதுவாகக் கர்னல் ஹீரான் படையினது ஒரு பிரிவு நத்தக்கோட்டையைத்

தாக்கிக் கைப்பற்றியது. இந்த அதிர்ச்சியில் திருவாங்கூர் மன்னர் வசம் இருந்த களக்காட்டுக் கோட்டை, காப்பாரற்றுப் போயிற்று. பிற சிறு சிறு பாளையப்பட்டுக்களும் கைகட்டிக் கப்பம் கட்ட விழைந்தன. இதற்குள், 'திருச்சிக்கு ஆபத்து! திரும்புக!' என்ற கும்பினிக் கட்டளை பட்டாளத்திற்குக் கிடைத்தது. இச்செய்தி காட்டுத்தீயெனச் சீமையெங்கும் பரவியது. பாளையக்காரர்களுக்கும் குளிர் விட்டுப் போயிற்று.

கும்பினிப் பட்டாளம் பாஞ்சாலங்குறிச்சியின் 'ஜாமீன் ஆட்களை' அழைத்துக்கொண்டு திரும்பியது. ஆனால், 'திருச்சிக்குப் பட்டாளம் திரும்பு முன் அண்மையில் உள்ள நெற்கட்டுஞ்செவ்வல் பூலித்தேவரை அடக்க வேண்டும்,' என்று ஆர்க்காட்டு நவாபுவின் உடன் பிறந்தானாகிய மாபூஸ்கான் மன்றாடிக் கேட்டுக்கொண்டான். கர்னல் துரை, 'அப்படியே ஆகட்டும்!' என்று பூலித்தேவர் கோட்டையைப் பலமாக முற்றுகையிட்டார். நடந்தது என்ன? மாவீரர் பூலித்தேவரின் காந்தக் கண் பார்வை கர்னலின் இருமொழியாளன் (துபாஷ்) மீது பாய்ந்தது. 'துபாஷ்' உண்மையைக் கக்கிவிட்டான். அதன் பயனாகப் பூலித்தேவருக்குக் கர்னலிடம் போதிய பீரங்கிப் படை இல்லை என்ற இரகசியம் விளங்கியது. மாற்றான் வலியறிந்து மறவர் பெருந்தகை கொண்ட மகிழ்ச்சிக்கு எல்லையில்லை! 'முற்றுகை முற்றட்டும்!' என்று முழங்கினார். கர்னல் கதி கலங்கிப் போனான். 'ரூபாய் இருபதினாயிரம்—அவ்வளவுதான்—திரும்பிப் பார்க்காமல் போய்விடு

வேன்!' என்றார் தளபதி—ஹீரான் துரை. 'சல்லிக் காசு இல்லை; போ!' என்றார் பூலித்தேவர். துரைக்கு என்ன செய்வது என்பது புரியவில்லை. சரியான சோறும் தண்ணீரும் இல்லாமல் வாடி வதைந்த கும்பினிப் பட்டாளம் கலகம் புரியத் தொடங்கியது. வெள்ளைத்துரை வேறு வழியின்றி வெட்கத்தோடும் வேதனையோடும் மதுரைக்கும் பின்னர்த் திருச்சிக்கும் போய்ச் சேர்ந்தார். அங்கே சென்ற ஹீரானைக் கும்பினியார் நேரே சென்னைக்கு அழைத்துப் பெரிய லஞ்ச ஊழல்களுக்காகக் குற்றம் சாட்டி வேலையை விட்டே விரட்டினர். இவ்வாறு முடிந்தது கும்பினியின் முதற்பெரும் படையெடுப்பு![16]

கும்பினிப் படையின் முதற்படையெடுப்பைச் செல்லாக் காசாக்கித் திருநெல்வேலிச் சீமையை விட்டுப் பூலித்தேவர் வெளியேற்றியதும் பாளையக் காரர்கள் இட்டது சட்டமாயிற்று.

பட்டாணியன் மூடேமியா திருவாங்கூர் சென்று களக்காட்டைக் கைப்பற்றிக்கொள்ளுமாறு கேரள மன்னரை ஊக்கினன். அந்நாட்டுப் படையும் வந்தது. முள்ளை முள்ளாலேதான் களையவேண்டும் என்ற அரசியல் தந்திரத்தை முற்றும் பயன்படுத்தத் தொடங்கினர் பூலித்தேவர்; திருவாங்கூர்ப் படையின் வருகையை மாபூஸ்கானுக்கு எதிராகப் பயன்படுத்தத் திட்டமிட்டார். இச்செய்தி ஆயிரம் தேள்கள் ஒருங்கே கொட்டியது போலக் கர்னல் ஹீரானோடு மதுரை சென்ற மாபூஸ்கானுக்கு எட்டியது. உடனே அவன் நெல்லைப்பதி நோக்கி விரைந்

தான்; கும்பினியின் ஆயிரம் சிப்பாய்களும் நவாபுவின் அறுநூறு குதிரை வீரர்களும் போதமாட்டார்கள் என்று மேலும் ஒரு பெரும்படையைத் தானே திரட்டினன்.

திருவாங்கூர்ப் படை களக்காட்டை நெருங்கியது. பூலித்தேவரும் அதனுடன் சேர்ந்துகொண்டார். இரு பெரும்படைகளுடன் நவாபுவின் படை மோதியது; முறிந்தது; நவாபுவின் வீரர்கள் புறங்காட்டிய வண்ணம் தலை தெறிக்க ஓடினார்கள். வேகமாக ஓடுவதற்குத் தடையாய் இருக்கிறது என்று துப்பாக்கிகளை எல்லாம் அவர்கள் வீசி எறிந்துவிட்டுச் சென்றார்கள். பூலித்தேவரின் படைகள் 'கண்டோம்! கொண்டோம்!' என்று அவற்றை ஒன்று விடாமல் கவர்ந்துகொண்டன.[17] உடனே மூடேமியா அப்போதைக்கு நவாபுவின் வசம் இருந்த களக்காட்டுக் கோட்டையைத் தாக்கினன். வெற்றி தலை வாயிலைத் தட்டும் நேரத்தில் கூலிக்கு மாரடிக்க வந்த திருவாங்கூர்ப் படை காரணமின்றி ஓடிவிட்டது. வேறு வழியின்றி அதனுடன் மூடேமியாவும் ஓடிவிட்டான். இடமும் காலமும் அறிதலில் வல்ல பூலித்தேவர், தம் உறைவிடமாகிய நெற்கட்டுஞ் செவ்வலுக்குத் திரும்பிவிட்டார். இந்நிகழ்ச்சிகளை எண்ணி மாபூஸ்கான் ஆகாயக் கோட்டை கட்டினன். ஆனல், உடனே மூடேமியா திருவாங்கூர்ப் படையுடன் வந்து, களக்காட்டைத் தாக்கிக் கைப்பற்றினன். இவ்வெற்றிக்குப் பூலித்தேவரும் பெருந்துணை புரிந்தார். எதிர்த்து வந்த நவாபுவின் படை நையப் புடைக்கப்பட்டது. இருநூறு குதிரை வீரர்

களும் ஐந்நூறு சிப்பாய்களும் சிறைப்பட்டார்கள். உண்ண உணவும் பருக நீரும் இல்லாமல் நவாபுவின் சேனை குற்றுயிருடையதாயிற்று. அதைக் காப்பாற்ற உணவுப் பொருள்கள் வெளியிலிருந்து தருவிக்கப்பட்டன. அதற்குக் காவலாகக் கும்பினிப் பட்டாளம் நிழல் போல வந்தது. ஆயினும் என்ன! பொருள்கள் யாவும் பூலித்தேவர் உடைமையாயின.[18]

அடிபட்ட நாய் குரைப்பது போல மாபூஸ்கான் நெற்கட்டுஞ்செவ்வலை முற்றுகையிட்டான். மாவீரர் பூலித்தேவரிடம் மாபூஸ்கான் என்ன செய்ய முடியும்? திருநெல்வேலியை நோக்கி வெறுங்கையனாய்த் திரும்பினான்.[19]

எவ்விதப் பெருமுயற்சியுமின்றியே தமக்குக் கிடைத்த வெற்றிகளால் மிகுந்த ஊக்கமும் உவகையும் கொண்ட பூலித்தேவர், தம் பலத்தை அதிகப்படுத்திக்கொள்வதில் நாட்டம் கொண்டார். மூடேமியாவும் வடகரை[20] முதலிய மேற்படாகைப் பாளையப்பட்டுக்களும் பூலித்தேவர் பக்கம் சேர்ந்தன. இந்நிலையில் அவர் கீழ்ப்படாகைப் பாளையப் பட்டுக்களையும் தம்முடன் சேர்த்துக்கொண்டு ஆர்க்காட்டு நவாபுவையும் ஆங்கிலக் கும்பினியையும் வன்மையாக எதிர்த்து விரட்டத் திட்டமிட்டார்; அதன்பொருட்டுக் கீழ்ப்படாகைப் பாளையங்களுக்குத் தலைவராய் இருந்த பாஞ்சாலங்குறிச்சிக் கட்டபொம்முவை மிகவும் வேண்டிக்கொண்டார். ஆனால், கட்டபொம்மு அதற்குச் சிறிதும் இசையவில்லை. அவரைப் போலவே எட்டையபுரத்தாரும் இணங்கவில்லை; 'எங்கள் ஆட்கள் கப்பப் பாக்கிக்காகத்

திருச்சியில் பிணையாக வைக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களை நாங்கள் மீட்க வேண்டும். எனவே, ஆர்க்காட்டு நவாபுவுக்கு எதிராகப் போரில் சேரலாம்," என்றனர். பாஞ்சை எட்டையபுரச் செய்தி இதுவாக, மதுரைப்பாளையக்காரர் சிலர் பூலித்தேவர் பக்கம் சேர்ந்தனர்.[21]

இச்செய்தி திருச்சியிலிருந்த நவாபுவுக்கும் சென்னையிலிருந்த கும்பினிக்கும் விரைவில் எட்டியது. முன்னரே மாபூஸ்கானின் திறமைக்குறைவை நன்கு உணர்ந்திருந்த கும்பினியார், அதை நவாபுவிற்கு எடுத்துரைத்து, நாட்டைத் தம் மேற்பார்வையில் கொண்டுவர முயன்றனர்; இதற்கிடையில் காலதாமதமின்றித் தென்பாண்டிச் சீமையில் உருவாகி வரும் பாளையக்காரர்களின் ஒற்றுமை அணியை முறித்து எறியவும் விழைந்தனர். ஆங்கிலப் படை ஒன்றும் இல்லாத நிலையில் பெருஞ் சுதேசிப் படை ஒன்றை உருவாக்கி, அதைக் கான் சாகிபுவிடம் ஒப்பித்து அனுப்பினர். அப்படை வருமுன் பூலித்தேவரும் அவரைச் சேர்ந்தவரும் சீவில்லிபுத்தூர்க் கோட்டையைத் தாக்கினர். அப்போது அதைக் காத்து வந்த நவாபுவின் உடன் பிறந்தான் அப்துல் ரஹீமும் அவன் உறவினனான அப்துல் மகூலியும் மாபூஸ்கானோடு சேர்ந்துகொண்டு பூலித்தேவரை எதிர்க்கத் துணிந்தனர். ஆனால், முடிவில் கோட்டை பூலித்தேவர் வசமாயிற்று; நவாபுவின் ஆட்கள் உயிர் பிழைத்தால் போதும் என்று ஓடிவிட்டார்கள்.[22]

பூலித்தேவர் அடைந்த இந்தப் பெரிய வெற்றி மதுரைப் பாளையக்காரர்களைத் தலை நிமிர்ந்து நிற்கச் செய்தது. இதற்கு முன் அஞ்சி அஞ்சி நின்ற அவர்கள், இப்போது துணிந்து பூலித்தேவருடன் இணைந்து போர்க்கொடி உயர்த்தினார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் பூலித்தேவரிடம் மொத்தம் ஆயிரம் பேர் கொண்ட குதிரைப்படையும் இருபத்தையாயிரம் பேர் கொண்ட காலாட் படையும் இருந்தன.[23] நிலைமை தனக்கு முற்றும் அழிவூட்டக் கூடியதாய் இருப்பதை அறிந்த மாபூஸ் கான், கிழக்குப் பாளையப்பட்டுக்களையும் அவற்றிற்குத் தலைமை தாங்கிய பாஞ்சாலங்குறிச்சிக் கட்டபொம்முவையும் தன்னோடு சேர்ந்துகொள்ள வேண்டினான். இந்தக் காரியத்தைச் சாதிக்க அக்கம் பக்கத்துக் கிராமங்கள் சிலவற்றைக் கட்டபொம்முவுக்குத் தந்தான்; திருச்சியில் பிணை வைத்திருந்த கட்டபொம்முவின் ஆட்களை மீட்டுத் தருவதாகவும் வேறு பல வளங்களை அவர்களுக்குச் சாதித்துத் தருவதாகவும் பசப்பு மொழிகள் கூறினான். மாபூஸ்கானின் வலையில் கட்டபொம்மு வசமாகச் சிக்கினார்.[24]

பூலித்தேவர் கண்கள் சிவந்தன. அவர் போர் முரசு கொட்டினார். பூலித்தேவருக்கும், கட்டபொம்முவும் மாபூஸ்கானும் இணைந்த படைக்கும் இடையே 1756-ஆம் ஆண்டு, மார்ச்சுத் திங்கள், இருபத்தோராம் நாள் கடும்போர் மூண்டது.[25] போரின் முடிவு பூலித்தேவருக்குப் பாதகமாகவே அமைந்தது. மூடேமியா போரில் மாண்டான். தேவரும் காலம் வரும் என்று கருதியும், கட்டபொம்முவின்

போக்கை நினைந்து வேதனையுற்றும் தம் கோட்டைக்குத் திரும்பினார்.

இந்தச் செய்தி திருச்சியில் இருந்த கான்சாகிபுவுக்குப் போர் நடந்த மூன்றாம் நாளே எட்டிற்று. கட்டபொம்முவையும் எட்டையபுரத்தார் பிணையாக விட்டிருந்த ஆட்களையும் அழைத்துக்கொண்டு கான்சாகிபு தென்திசை நோக்கினான். கயத்தாற்றில் மாபூஸ்கானைக் கான்சாகிபு சந்தித்தான். கட்டபொம்முவையும் அவர் ஆட்களையும் உதவியாகக் கொண்டு மாபூஸ்கான் வெற்றி பெற்றிருந்தாலும், அவன் கண்கள் அழுதுகொண்டிருந்தன.[26] காரணம், அவன் பூலித்தேவரைப் பற்றி நன்கறிவான்; தன் வெற்றி நெடுநாளைக்கு நிலைக்காது என்பதையும் அறிவான். மேலும், பாளையங்களிடம் அவன் எதிர்பார்த்தபடி பணவசூல் நடக்கவில்லை.

கயத்தாற்றை விட்டுக் கான்சாகிபு எட்டையபுரம் சென்றான். அவனைக் கட்டபொம்முவும் எட்டையபுரத்தாரும் எதிர்கொண்டு வரவேற்றனர். அங்கிருந்து புறப்பட்டுக் கான்சாகிபு தென்பாண்டி நாட்டில் ஒவ்வொரு பாளையத்துக்குள்ளும் நுழைந்தான்; கப்பப் பணத்தை வசூல் செய்தான்; தயங்கியவர்களையும் மறுத்தவர்களையும் தாக்கினான்; தலை குனியச் செய்தான்; இறுதியாகச் சீவில்லிபுத்தூரை அடைந்தான். அரசியல் தந்திரத்தில் வல்லவரான பூலித்தேவர், கான்சாகிபு ஒரு பேய் மனிதன் என்பதை நன்கறிவார்; அதனால், தம் பிரதிநிதிகளை அனுப்பி நல்ல வார்த்தை பேசி அவனை வறிதே திரும்பிச் செல்லுமாறு செய்தார்.[27]

அருகில் நடந்த போரில் கும்பினிப் படையே வெற்றி பெற்றது.[29]

தங்களிடம் கும்பினியை வெல்லப் போதிய படையின்மையை உணர்ந்த பாளையக்காரர்கள், அந்நாளில் திண்டுக்கல்லைக் கைப்பற்றியிருந்த ஆங்கிலேயரை அடியோடு வெட்டிச் சாய்க்கக் கறுவிக்கொண்டிருந்த மாவீரர் ஐதர் அலியுடன் உறவுகொண்டார்கள். இந்தச் செயல் உருப்பெறப் பெரும்பொறுப்பை மேற்கொண்டவர் பூலித் தேவரே. கும்பினியை அழிக்கத் துணை புரிந்தால் ஐந்து லட்சம் ரூபாய் தருவதாகப் பூலித்தேவர் ஐதருக்குச் செய்தி அனுப்பினர். சோழவந்தான் சீமையைத் தருவதாக மாபூஸ்கான் தரப்பில் கூறப் பட்டது. தங்கள் முயற்சி வெற்றி பெறின், மதுரையைப் பழைய நாயக்க மன்னர் பரம்பரை யைச் சார்ந்தவனும் சிவகங்கையில் வாழ்ந்தவனு மாகிய விசயகுமாரனுக்குத் தருவதென்றும், மாபூஸ் கானுக்கு மைசூர் நாட்டில் சிறந்த ஒரு பதவியைத் தருவது என்றும் ஏற்பாடாயிற்று.[30]

எப்படியோ கும்பினியார் இந்தச் செய்தியை அறிந்தனர். பதறி அடித்துக்கொண்டு கும்பினிப் படையும் கான்சாகிபுவும் முதலியாரும் மதுரையைக் காக்க விரைந்தனர். வாள் வலியால் மட்டும் இப் போது காரியத்தைச் சாதிக்க முடியாது என்பதை உணர்ந்த அவர்கள், பாளையக்காரர்களுக்குத் தலைமை தாங்கப் பூலித்தேவரை எப்படியாவது மயக்கிக் கைக்குள் போட்டுக்கொள்ள வேண்டும் என்று ஆசை கொண்டார்கள். இது துணிச்சலான

எண்ணந்தான்! ஆனால், பூலித்தேவரா இசைபவர்! அவர் தம் அரசியல் தந்திரங்களை நன்கு பயன்படுத்த நினைத்தார்; 'கொஞ்சம் பொறுங்கள்! இதோ பார்க்கலாம்!' என இப்படியே மாயமொழிகள் கூறி வந்தார். எதிரிகளுக்குத் தம்மைப் பகைவராகப் பறை சாற்றிக்கொள்ளாமலே காரியத்தை வெற்றியாக முடிக்கவேண்டும் என்பதே எப்போதும் பூலித்தேவரிடம் காணப்பட்ட போக்கு. அவர் இப்படியே இப்போதும் நடந்துகொண்டார்; மேலும், தம் ஆட்களைச் சிவில்லிபுத்தூருக்கு அனுப்பிக் கும்பினியின் செயல்களைக் கூர்ந்து கவனிக்கச் செய்தார். எவ்வாறோ அவர்களுள் ஐந்து மறவர்களைக் கண்டுபிடித்துக் கான்சாகிபு பீரங்கி வாயில் வைத்துச் சுட்டுத்தீர்த்தான். இதை அறிந்த பூலித்தேவருக்குச் சினம் பொங்கியது. ஏற்கெனவே சினமுற்றிருந்த வயப்புலியின் வாலை உருவிவிட்டதுபோல ஆயிற்று. பூலித்தேவர், 'காரியத்தைத் தந்திரமாக முடிக்க வேண்டும்,' எனக்கருதி, மாபூஸ்கானைத் தம் உறைவிடமாகிய நெற்கட்டுஞ்செவ்வல் கோட்டையிலேயே தங்கச் செய்தார். இது வாயிலாக மாபூஸ்கானைக் 'கோட்டை'விடாமல் இருக்கலாம் அல்லவா? மேலும், அவன் தம் கோட்டைக்குள் இருப்பதால் கும்பினிப் படையும் காலாட்படையும் தம்மைத் தாக்கத் தயங்கும் அல்லவா ?

இங்கிலேயில் பாளையங்கோட்டையைக் கைப்பற்றுவது தனக்குப்பெரும்பலம்தரும் என்று கருதினான் மாபூஸ்கான்; அவ்வாறே பாளையங்கோட்டையைப் பலமாகத் தாக்கினான். பூலித்தேவர் துணையோடு

அப்போது அந்தக் கோட்டையைக் காத்து வந்த வசவப்ப நாயக்கன், பூலித்தேவரின் பேராதரவு பெற்றுள்ள மாபூஸ்கானை எதிர்க்கத் துணியவில்லை; எனவே, கட்டபொம்முவுக்கு அழைப்பு விடுத்தான்; அதற்குப் பரிசாகச் சில கிராமங்களையும் கட்டபொம்முவுக்குக் காணிக்கையாக்கினான். வருவாய் கண்டதும் வழக்கம்போலக் கட்டபொம்மு எட்டையபுரச் சேனையுடன் வந்து பாளையங்கோட்டையைக் கைப்பற்றினார்.

கட்டபொம்முவின் இத்தகைய பண்பு பற்றிச் சிறந்த சரித்திர ஆராய்ச்சியாளர் ஒருவர் வரைந்துள்ள வாசகத்தை இங்கு நினைவுபடுத்திக் கொள்வது பொருத்தமேயாகும்: 'அம்மட்டிலோ! கட்டபொம்மு தம் படையை நடத்திச் சென்று மதுரையைக் கைப்பற்றியதற்காக அதனை முற்றுகையிட்டிருந்த கும்பினிக்குப் பெரிதும் உதவி செய்து அதனை மீட்கலானார். இவ்விதம் கட்டபொம்முவின் உதவியாலேதான் அந்தக் காலத்தில் நவாபுவுக்குச் சாதகமான நிலைமை ஏற்பட்டது. அதன் பயனாக அவருக்கும் பல கிராமங்கள் கிடைத்தன.'[31]

தற்காலிகமாகப் பாளையங்கோட்டை தப்பித்துக் கொண்டாலும் அதன் எதிர்காலம் நம்பிக்கை தரக் கூடியதாய் இல்லை. என்றாயினும் பாளையங்கோட்டை சுதந்தர உள்ளங்கொண்ட பாளையக்காரர் உடைமையாகிவிடக்கூடிய நிலைமையே இருந்தது. இதற்குள் கான்சாகிபு தன்னைத் தென்சீமைகளின் சர்வாதிகாரியாக்கிக்கொண்டான்; கும்பினியிடம் தனக்கு

இருந்த அளவற்ற செல்வாக்கை வரம்பில்லாமல் பயன்படுத்த ஆரம்பித்தான். பூலித்தேவர் கிழித்த கோட்டை இனி மாபூஸ்கான் தாண்ட முடியாது என்பதையும் அவன் புரிந்துகொண்டான். அதனுல், மாபூஸ்கானை மெல்ல வெளியேற்ற வேண்டும் என்று கும்பினியையும் நவாபுவையும் வற்புறுத்தினுன். அவன் கருத்துப்படியே அவர்கள் இசைந்தாலும், நாட்டின் சூழ்நிலை அவன் திருநெல்வேலியை நோக்கி உடனே படையெடுத்துச் செல்வதற்கு ஏற்றவாறு இல்லை. எந்தக் கணத்திலும் ஐதர் மதுரைமேல் பாய்ந்துவிடக் கூடும் என்ற பயமே கான்சாகிபுவும் கும்பினிப்படையும் மதுரையை விட்டுச் செல்லப் பயந்ததன் முக்கிய காரணம். மேலும், மாபூஸ்கானும் தென்சீமைப் பாளையக்காரரும், பிரெஞ்சுக்காரர்களின் உதவியை ஆவலுடன் எதிர் நோக்கியிருந்தனர். இதற்கிடையில் ஆர்க்காட்டு நவாபுவிடமிருந்து மாபூஸ்கானை அழைத்துச் செல்ல வந்த தூதுவன், தன் காரியத்தில் எள்ளளவும் வெற்றி பெருமல் ஏக்கத்துடன் திரும்பினுன். பூலித்தேவரும் பிற பாளையக்காரரும், எந்த மாபூஸ்கான் தம்மை எதிர்க்கச் சில காலத்திற்கு முன் கும்பினிக்குத் தூபமிட்டானே, அந்த மாபூஸ்கானைக் கண்ணி வைத்துப் பிடித்துச் சாறற்ற சக்கையாக்கி வைத்திருந்தனர். சிறப்பாகப் பூலித்தேவர் கோலுக்கு அஞ்சி ஆடும் நிலையில் மாபூஸ்கான் இருந்தான்.

இந்த நிலையில் கும்பினியின் தலை நகரான சென்னை பிரெஞ்சுக்காரர்களால் முற்றுகையிடப்

பட்டது. கும்பினியிடம் வீரப் பதக்கம் பெற்று, அதன் கண்ணில் 'இணையில்லாத் தளபதி'யாய்க் காட்சியளித்த கான் சாகிபு, சென்னை நகர் நோக்கிக் காற்ருய்ப் பறந்தான். ஆங்கிலேயரை எதிர்த்து ஆங்காங்குப் பிரெஞ்சுக்காரர்கள் சிறு சிறு வெற்றி பெற்ருர்கள். இது தென்சீமைப்பாளையக்காரர் களுக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. அவர்கள் தோள்கள் பூரித்தன. முன்பே தாங்கள் எண்ணிய படி ஆடப் பழக்கி வைத்திருந்த மாபூஸ்கானுக்கு அவர்கள் பட்டங்கட்டி அரியணையில் அமர்த்தி மரி யாதைகள் செய்தாங்கள். ஆயினும், என்ன? வர லாற்று அறிஞர் கூறுவது போல, அவனுக்கு உண்ண உணவில்லை; பூலித்தேவர் கொடுத்தாற் ருன் உண்டு.[32] அங்கிலையில் (1760ல்) கும்பினிக்கும் நவாபுவுக்கும் நெருங்கிய நண்பராய் இருந்த பொல் லாப் பாண்டிய நாயக்கர் என்னும் கட்டபொம்மு இறந்தார். அவருக்குப்பின் பாஞ்சாலங்குறிச்சி யின் அரசுரிமை அவர் தலைமகனுரான ஜகவீர பாண்டிய நாயக்கர்[33] கைக்கு மாறியது. இந்தக் கட்டபொம்மு தம் தந்தையாரைப் போன்றவரல்லர்; பூலித்தேவரைப் போன்றே வெள்ளைக் கும்பினியை வேரோடு கல்லி எறிய வேண்டும் என்ற கொள்கை படைத்தவர். இவர் பாஞ்சைப்பதியின் காவலரா னது பூலித்தேவருக்கு அளவிடற்கரிய மகிழ்ச்சி என்றே கூறலாம். இவருக்கு முன் இருந்த கட்ட பொம்மு நெருக்கடியான நேரங்களில் செய்த துரோகங்களை அவரால் அவ்வளவு எளிதில் மறந்து விட முடியுமா?

பிரெஞ்சுக்காரர்கள் சென்னையை முற்றுகையிட்ட செயல்கள் ஒருவாறு முடிந்தன. ஆனால், இதற்கு இடையில் பத்து மாதங்கள் பறந்தோடிவிட்டன. தென்சீமையில் பூலித்தேவர் ஆட்சியே நடந்து வந்தது என்று கூறுதல் மிகையாகாது.

சென்னையில் தன் வேலைகளை முடித்துக்கொண்டு தென்பாண்டிச் சீமையில் கும்பினி வேலைகளைக் கண்ணும் கருத்துமாய்க் கவனிக்க வாளும் கையுமாய் விரைந்தான் கம்மந்தான் கான் சாகிபு. புயலெனப் படையெடுத்து வந்த அவன் கொல்லங்கொண்டான் கோவில்பட்டிக் கோட்டைகளைத் தாக்கித் தரைமட்டமாக்கினன்; புரட்சி புரிந்து வந்த பாளையக்காரர்களுக்கு இரகசிய உதவிகள் அளித்து வந்த பாஞ்சாலங்குறிச்சியாரையும் எட்டையபுரத்தாரையும் தன் படைகளை அவர்கள் காட்டிற்குள் அனுப்பித் தடுத்து நிறுத்தினன். நிலைமை வேறு விதமாக உருவெடுப்பதை அறிந்த மாபூஸ்கானுக்கு உதறல் எடுத்தது. 'மானமாய்ப் பிழைக்க ஒரு ஜாகீர் கொடுங்கள்! இந்தத் திக்கில் தலை காட்டாமலே போய்விடுகிறேன்! ஆனல், ஒன்று: நான் தப்பி வருவதற்கு வழியின்றிப் பூலித்தேவர் தலைமையில் உள்ள பாளையக்காரர்களின் இருப்புக் கரங்களில் சிக்கியுள்ளேன். எனக்கு விடுதலை தாருங்கள்!' இவ்வாறு பகைவர்க்கு ஓலையனுப்பித் தன் பிறவிப் புத்தியை ஒளியாமல் காட்டிக்கொண்டான் மாபூஸ்கான்.

கீழ்த்திசைப் பாளையங்களை ஒருவாறு கட்டுக்குள் அடக்கிவிட்ட கம்மந்தான் கான் சாகிபு

மேற்றிசைப் பாளையக்காரரிடையே பிரிவை உண்டு பண்ணிப் பூலித்தேவரின் பெரும்பலத்தை உடைக்கச் சூழ்ச்சி செய்தான்; அதில் வெற்றியும் பெற்றான். பூலித்தேவருக்குச் சிறந்த துணைத்தலைவர்களாய் விளங்கியவர்கள் வடகரை என்ற சொக்கம்பட்டிப் பாளையக்காரர்களும் திருவாங்கூராருமே. திருவாங்கூர் எல்லையை அடுத்திருந்தது வடகரைப்பாளையம். இவ்வமைப்பைப் பயன்படுத்தித் தமிழ் நாட்டுப் பாளையத்திற்கும் திருவாங்கூர்ப் பாளையத்திற்கும் போர் மூட்டிவிட்டான் கான் சாகிபு. திருவாங்கூர்ப் படையும் கான் சாகிபு படையும் ஒன்று சேர்ந்தன; வடகரையைக் கடுமையாகத் தாக்கின! வீரப்போர் புரிந்து சூழ்ச்சியையும் கொடுமையையும் எதிர்த்து வெல்ல முடியாத நிலையில் வடகரையார் நெற்கட்டுஞ் செவ்வலில் பூலித்தேவரிடம் சரண் புகுந்தனர்.[34] அந்நாளில் பூலித்தேவரும் அவர் நாடும் சுதந்தர வீரர்களுக்குத் துன்பம் வந்த காலத்தில் தஞ்சம் அளிக்கும் தாயகமாய் இருந்த மாண்பினை இந் நிகழ்ச்சியே மெய்ப்பிக்கும்.

பூலித்தேவரின் உள்ளத்தில் கடுங்கோபமும் பெருந்துயரமும் மாறிமாறிச் சுழல்காற்றாய் அடித்தன. கான்சாகிபுவின் கொடிய உள்ளத்தையும் கும்பினிக்காக அவன் இழிதொழில் புரியும் போக்கினையும் எண்ணி, அவர் உள்ளம் கொல்லன் உலையாயிற்று. எனினும், அவர் தளர்ந்தார் இல்லை. வந்தவாசியில் கும்பினிப் படை வதைக்கப்பட்டதும், வட மாவட்டங்களில் போர் நின்றதும், திருநெல்வேலிக்குத் தம் படையை அனுப்பிக் கும்பினிப்

படையை வென்று முகம்மது அலிக்குப் பதிலாக மாபூஸ்கானை நவாபுவாக ஏற்படுத்துவதாக ஊக்க மூட்டிப் பிரெஞ்சுத் தளபதி டுப்ளே ஒரு கடிதம் எழுதினர். அதைத் திருவாங்கூருக்கு அனுப்பிக் கும்பினிப் படைக்கு ஆதரவு காட்டுவதைத் தவிர்த்துத் தம்பக்கம் சேர்ந்துகொள்ள வேண்டினர் பூலித்தேவர். அரசியல் மேதையோடும் அளவற்ற நாட்டுப்பற்ருேடும் அந்நிய ஆட்சியை அதன் ஆரம்பக் கட்டத்திலேயே அகற்ற வேண்டும் என்ற தணியாத ஆர்வத்தோடும் பூலித்தேவர் திருவாங்கூராருக்கு விடுத்த செய்தி செவிடன் காதில் ஊதிய சங்காயிற்று. திருவாங்கூரார் இரட்டை வேடம் புனைந்தனர்; பூலித்தேவரிடமிருந்து வந்த கடிதத்தைக் கும்பினியாரிடம் காட்டி, அவர்களை மிரட்டப் பார்த்தனர். கும்பினிச் சார்பில் போர் முரசு கொட்டிக்கொண்டிருந்த கான் சாகிபு திருவாங்கூரை வழிப்படுத்தி மீண்டும் களக்காட்டைக் காணிக்கையாக்கினன். மண்ணைக்கண்ட கடல்மலை நாட்டார் நொடிப்போதில் தம் மதியை இழந்து பழைய நண்பர் பூலித்தேவரைக் கைவிட்டனர்; கான் சாகிபுவிடம் காதல் கொண்டனர்.

கான் சாகிபுவும் திருவாங்கூராரும் தென்பாண்டிப் பாளையக்காரர்களை அடக்க முதலில் பூலித்தேவரையே அழிக்க வேண்டும் என்று தீர்மானித்தனர். அதன் விளைவாக மூண்டது பெரும்போர். 1759, நவம்பர், 6-ஆம் தேதி மூண்ட அப் போரில் பூலித்தேவரும் பல்லாயிரக் கணக்கான அவர் வீரர்களும் காட்டிய விடுதலை ஆர்வமும்

தியாக உணர்ச்சியும் வியத்தற்குரியன. [35] ஒரு மாதக் கடும்போருக்குப்பின் வாசுதேவ நல்லூர்க் கோட்டையை 1759-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம், 4-ஆம் தேதி முற்றுகையிட்டான், [36] கான் சாகிபு மிகப் பெரிய படையோடு. அந்தக் கோட்டை மேற்குமலைத் தொடருக்கு மூன்று மைல் தூரத்தில் உள்ளது. மண்கோட்டைதான் எனினும், காட்டரணும் மலையரணும் படைத்த மாபெருங்கோட்டை அது. பூலித் தேவருக்கு உரிய மிக்க பலம் பொருந்திய கோட்டைகளுள் வாசுதேவ நல்லூர்க கோட்டையும் ஒன்று. அந்தக் கோட்டையைப் பற்றிய அழகியதொரு வருணனை பின் வருவது: [37]

'இந்தக் கோட்டை அகலத்திலும் நீளத்திலும் முறையே 300 கெஜமும் 650 கெஜமும் கொண்ட ஒரு சிறந்த மண் கோட்டை. இதன் நான்கு மதில்களும் மண்ணினாலேயே செங்கற்களைக்காட்டிலும் பலமாகவும் உயரமாகவும் எழுப்பப்பட்ட சுவர்களால் அமைக்கப்பட்டும், இதன் ஒவ்வொரு மூக்கிலும் மூலையொன்றுக்கு ஒவ்வொரு கோபுரம் போன்ற ஒவ்வொரு கொத்தளமும், அவைகளில் ஒன்றுக்கொன்றின் இடையே சம சதுரங்களுக்குள்ளாகச் சிறிய வேட்டை ஒழிகள் போன்ற மறைவுள்ள நிலைமாடங்கள் அமைக்கப்பட்டும், வெளியிடங்களை அவற்றிலிருந்து தெரியாமல் பார்ப்பதற்கு வட்டமான சின்னஞ்சிறிய துவாரங்கள் அமைக்கப்பட்டும், ஒவ்வொரு கொத்தளமும் தனித்தனியான பாதுகாப்புச் சுவரால் அமைக்கப்பட்டும், உட்பிராகாரங்கள் கோட்டைச் சுவரை ஒத்த பாதுகாப்புச்

சுவர்களால் கட்டுவிக்கப்பட்டும் இருந்தன. இந்தக் கோட்டையின் அமைப்புக்கும் மதுரை, பாளையங் கோட்டை முதலிய நகரங்களின் கோட்டையின் அமைப்புக்கும் மிகுந்த வித்தியாசம் உண்டு. இந்தக் கோட்டை மண் சுவரினால் கட்டுவிக்கப்பட்டது என்றாலும், இதன் அமைப்பு ஒருவாறு நூதனம் போலத் தோன்றினும், பலத்தில் அவைகளைக் காட்டிலும் சிறந்தது என்பது சிலருடைய அபிப்பிராயமாகும்.'

இவ்வளவு பலம் பொருந்திய பூலித்தேவரின் வாசுதேவ நல்லூர்க் கோட்டையைப் பிடித்து, அவரையும் அவர் கோட்டையையும் நாசமாக்கக் கருதினான் கான்சாகிபு கம்மந்தான். திருவாங்கூரின் துணையோடு இதன்பொருட்டுக் கான் சாகிபுவுக்குத் துணைபுரிய அஞ்சங்கோ, நாகப்பட்டினம், மதுரை, பாளையங்கோட்டை, தூத்துக்குடி முதலிய இடங்களி லிருந்து கும்பினியாரால் ஏராளமான உதவிகள் அனுப்பப்பட்டன.[38] பூலித்தேவருக்கும் கம்மந்தா னுக்கும் பெரும்போர் மூண்டது.

ஏற்கெனவே ஒரு மாதம் போரிட்ட பின்பே வாசுதேவநல்லூர் முற்றுகை ஆரம்பமாகியது. கான் சாகிபுவின் கடுமையான இம்முற்றுகை ஒரு மாதம் நடைபெற்றது. கான் சாகிபு படைகள் பீரங்கிக ளால் கோட்டையைத் தகர்த்தெறியப் பன்முறை யும் முயன்றன. பூலித்தேவர் தம் இன்னொரு கோட்டையான நெற்கட்டுஞ்செவ்வலிலிருந்து வந்து கும்பினிப் படையை வாசுதேவ நல்லூர்க் கோட்

டைக்கு எதிர்ப் புறத்திலிருந்து தாக்கினார். அவர் அவ்வாறு தாக்குவதை அறிந்து வாசுதேவ நல்லூர்க்கோட்டைக்குள் இருந்த வீரத்தமிழ் மறவர் பல்லாயிரவரும் அப்புறத்திலிருந்து வெற்றி ஆரவாரம் புரிந்து கும்பினிப்படையைத் தாக்கினர். பூலித்தேவருடைய இந்த இருமுனைத் தாக்குதலால், ஆப்பசைத்த குரங்கின் கதியாயிற்று கம்மந்தான் நிலை. பூலித்தேவர் படையிலிருந்த கள்ளர், மறவர், அகம்படியர் அனைவரும் கும்பினிப் படையைத் துவட்டி எடுத்தனர். இரு தரப்பிலும் பெருஞ் சேதங்கள் ஏற்பட்டன எனினும், பூலித்தேவர் படையினரே முடிவில் வாகை மாலை சூடினர்.[39]

பூலித்தேவரின் நோக்கம் தமிழகத்தை அந்நிய ஆட்சியினின்றும் காப்பது; கம்மந்தானது நோக்கமோ, தமிழகத்தை அந்நியருக்கு அடிமையாக்கி அவர்களிடம் நல்ல பெயர் வாங்கித் தானே சர்வாதிகாரி ஆவது. எனவே, வாசுதேவ நல்லூர்ப் போர் தமிழகத்தின் விடுதலைக்காக நிகழ்ந்த போரே. இரண்டு மாதங்கள் நடந்த இக்கடும்போரில் தம்மை எதிர்த்த பல்வேறு கொடுமைகளையும் விடுதலை வீரர்கள் முறியடிக்க வேண்டியிருந்தது.

பூலித்தேவரின் வெற்றி கம்மந்தானுக்குவிழுந்த பேரிடி. பூலித்தேவருக்கோ, உண்மையில் இது மிகப் பெரிய வெற்றி; அவர் புகழ் மலிந்த வாழ்வின் பொற்சிகரம். சுதந்தர வீரர்களை அடக்க ஏறத்தாழ இரண்டு மாதங்கள்[40] கடுமையாகப் போராடியும் பயனில்லாமல் தோற்றுப்போன கான் சாகிபு

வெட்கத்தைக் கட்கத்தில் அடக்கிக்கொண்டு திருநெல்வேலியை நோக்கி ஓடினன். காசுக்காகத் தமது வரலாற்றை மாசுபடுத்திக்கொண்ட திருவாங்கூரார் கேரளம் நோக்கி ஓடினர். கான் சாகிபுவின் தோல்வி அவன் நண்பர்களையும்—ஏன், வெள்ளைக் கும்பினியையுமே-அயர்ந்து போகச் செய்தது. அந்நாளில் ஐதர் பிரெஞ்சுக்காரர் அனைவர் கவனத்தையும் கவர்ந்து, கர்நாடகம் கும்பினியார் கையிலிருந்து நழுவிவிடாமல் காவல் புரிந்து வந்தவன் அல்லவா கான் சாகிபு? அத்தகையவன் பூலித்தேவரால் முறியடிக்கப் பெற்றுப் புறங்காட்டி ஓடநேர்ந்தது கும்பினியாருக்குக் கலக்கத்தை ஊட்டியது.

மதயானை போல வஞ்சத்தை வைத்துக்கொண்டேயிருந்த கான் சாகிபு கம்மந்தான், வாசுதேவ நல்லூர் வெற்றிக்குப்பின் பூலித்தேவர் பலம் நாளுக்கு நாள் பெருகுவதைச் சற்றும் பொறுத்துக் கொள்ள இயலாதவனாய், பற்பல சதிகள் செய்தான்; முக்கியமாகக் காசை வாரி இறைத்துப் பூலித்தேவருக்குத் துணையாய் இருந்த வீரர் பலரை விலைக்கு வாங்கினன். அந்தோ! கூலிக்கு ஆசைப்பட்டுக் கொள்கையைப் பலியிட்டு வழக்கம் போலப் பலர் தம்மை விற்கத் துணிந்தனர்.[41] அது கண்டு கான் சாகிபு ஆனந்தக் கண்ணீர் விட்டுக் களித்தான். பூலித்தேவரோ, இரத்தக்கண்ணீர் விட்டுக் கதறினர்.

இந்நிலையில் கான் சாகிபு மீண்டும் ஒரு முறை பூலித்தேவரைத் தாக்க முனைந்தான். இம்முறை

வெள்ளை ஏகாதிபத்தியத்திற்கும் ஆர்க்காட்டு நவாபுவிற்கும் குற்றேவல் புரிந்து நாட்டு மக்களை வாள் முனையில் நாசமாக்கி வயிறு வளர்த்துக் களிப்பதையே குறிக்கோளாகக் கொண்ட கான் சாகிபுவுக்கும் வீரத் தலைவர் பூலித்தேவருக்கும் இடையே ஏற்பட்ட போர், மாவீரர் பூலித்தேவரின் பிறப்பிடமாகிய நெற்கட்டுஞ்செவ்வல் கோட்டை வாயிலிலேயே 1760-ஆம் ஆண்டு, டிசம்பர்த் திங்கள் (வாசுதேவநல்லூர்ப் போருக்குச் சரியாக ஓராண்டுக் காலம் கழித்து) நடந்தது. அது பற்றி வரலாற்றுக் களஞ்சியமாய் விளங்கும் இராபர்ட்டு ஓர்ம் என்பவர் எழுதிய பெருநூல் விளக்கமாகக் கூறுகிறது.[42]

கான் சாகிபு தன் படையின் பெரும்பகுதியை நெற்கட்டுஞ்செவ்வலின் முன் மறுபடியும் குவிக்கலானான். 1760-ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், நெற்கட்டுஞ்செவ்வலிலிருந்து மூன்று மைல் தொலைவில் உள்ள மலையடிவாரத்தில் கான் சாகிபுவின் படை முகாம் அடித்தது. திருநெல்வேலியிலிருந்து 1760-ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், 12-ஆம் தேதி கான் சாகிபு காற்றெனக் கடுகிவந்து, தன் படைகட்குத் தலைமை தாங்கிப் போர்க்கொடி உயர்த்தினான். இச்சமயம் கான்சாகிபு அஞ்சங்கோவிலிருந்தும் தூத்துக்குடியிலிருந்தும் வாங்கிய பேய்வாய்ப் பீரங்கிகளை வைத்துக்கொண்டு, குண்டுகள் கையில் இல்லாத நிலையில் திருச்சியிலிருந்து தனக்கு வரவேண்டிய உதவிக்காக வாய் பிளந்து காத்துக்கொண்டு இருந்தான். திருநெல்வேலியிலிருந்து அவன் வந்து எட்டு நாட்களாயின. 1760-ஆம் ஆண்டு, டிசம்பர்

மாதம், 20-ஆம் தேதி மதம் கொண்ட யானையின் மத்தகத்தின்மேல் சுதந்தரச் சிங்கம் ஓங்கி அறைந்தது! ஆம்! பூலித்தேவரின் படை—கயவர்களையும் கோழைகளையும் கழித்து எறிந்துவிட்டு நின்ற கொள்கை வீரர் படை—கான் சாகிபுவின் முகாமை நாற்புறமும் பாய்ந்து கிழித்தெறிந்தது. வீரமறவர் நூறு பேர் மாண்டனர்; கான் சாகிபு படையில் பத்துப்பேர் பிணமாயினர்! எழுபது பேரும் குதிரைகளும் குற்றுயிருடையராயினர். கதி கலங்கிப் போனான் கான் சாகிபு!

பூலித்தேவரின் வாழ்வில் வாசுதேவநல்லூர் வெற்றி பொற்சிகரமென்றால் நெற்கட்டுஞ்செவ்வல் வெற்றி அச்சிகரத்தின் மேல் இட்ட சுடர் விளக்கு எனலாம்.

பூலித்தேவரிடம் படுதோல்வியுற்ற கான்சாகிபு பழி வாங்க வசதியான காலத்தை எதிர் நோக்கிக் கறுவிய வண்ணம் இருந்தான். இதை நன்கு அறிந்திருந்த பூலித்தேவரும் அவர் நண்பர்களும், 'அண்ணனைப் பார்க்கச் சென்றுள்ளான் மாபூஸ் கான். அவன் அண்ணனுடன் மனவொற்றுமை ஏற்படாமல் மீண்டும் வந்துவிடுவான்; அப்புறம் நம் நிலைமை இன்னும் வசதியுள்ளதாகும்,' என்று எண்ணி, நாளும் தங்கள் படைப்பலத்தைப் பெருக்கிக்கொண்டு வந்தார்கள். ஆயினும், சுற்றுச் சூழ் நிலைகளாலும் நாட்டில் இருந்த பல்வேறு அரசியல் நிலைகளாலும் இருதரப்பார் அரசியல் சிந்தனைகளும் பல்வேறு வகையில் சிதறுண்டு போயின. நாளடைவில் ஆங்கிலக் கும்பினிக்குப் பெரும்பகையாகக்

கர்நாடகத்தில் இருந்த பிரெஞ்சு டச்சுக் கும்பினி களின் செல்வாக்கும் சிதையலாயிற்று. பாளையக் காரர்கள் எதிர்பார்த்தபடி மாபூஸ்கானும் திரும்பவில்லை. பூலித்தேவரை விட்டுப்போனதும் 'வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிக்கொண்டது' போல ஆயிற்று, மாபூஸ்கான் நிலை. இக்காரணங் களால் விடுதலை வேட்கை மிக்க தென்பாண்டிப் பாளையக்காரர்களின் நம்பிக்கை நசித்தது; பலம் தளர்ந்தது.

பொல்லாப் பாண்டிய நாயக்கராகிய கட்ட பொம்முவுக்கு மகனாய்ப் பிறந்த ஜகவீரக் கட்ட பொம்முவும் தம் தந்தையாரைப் போல அடிமைப் புத்தி படைத்தவராய் இல்லாவிட்டாலும், பூலித் தேவரைப் போல அஞ்சா நெஞ்சும் அரசியல் மேதையும் படைத்தவராய் இல்லை. இக்காரணங்கள் எல்லாம் சேர்ந்து பூலித்தேவரின் வாழ்வைத் துன்ப இருளில் மூழ்குமாறு செய்தன. அனைத்திற்கும் மேலாகக் கம்மந்தான் கான் சாகிபு சர்வாதிகார வெறி பிடித்துச் சுதந்தர வீரர்களைக் கொன்று, தமிழகத்தை இடையறாது சூறையாடினான்.

பூலித்தேவரின் பிறப்பு வளர்ப்புப் பற்றி நாம் ஒன்றும் அறிந்துகொள்ள இயலாமல் இருப்பது போலவே, அவர் இறுதி நாட்களைப் பற்றியும் தெளிவாகத் தெரிந்துகொள்ளப் போதுமான வரலாற்றுச் சான்றுகள் கிடைக்கவில்லை. ஆயினும், அந்தப் பெருவீரரின் முப்பெருங் கோட்டைகளாகிய வாசுதேவநல்லூரும் நெற்கட்டுஞ்செவ்வலும் பனை

யூரும் கான் சாகிபுவினால் வீழ்ச்சியுற்றன என்ற செய்தி அரசாங்கத்திற்கு அந்நாளில் எழுதப்பெற்ற சில கடிதங்களாலும் அவற்றை ஆதாரமாகக் கொண்டு கான் சாகிபுவின் வரலாற்றை விரிவாக ஆராய்ந்து எஸ். ஸி. ஹில் என்பவர் வரைந்துள்ள நூலாலும்[43] விளங்குகிறது.

இந்த நிகழ்ச்சிக்கும், இறுதியாக நாம் பார்த்த நெற்கட்டுஞ்செவ்வல் வெற்றிக்கும் இடையே ஏறத் தாழ ஓராண்டுக் காலம் உருண்டோடி இருக்கிறது. இந்த ஓராண்டுக் காலத்தில் வீரத் தலைவர் பூலித்தேவர் ஓயாத சிந்தனைக்கும் இடையறாப் போராட்டத்திற்குமே தம் வாழ்நாளை இரையாக்கி யிருக்கவேண்டும். எனினும், முடிவு அவர் வாழ்வைப் பாழாக்கிவிட்டது! துரோகம், பொறாமை, கோழைத் தனம் இவற்றை எல்லாம் தூவென இகழ்ந்து, உயிருக்கு அஞ்சாது தமிழகத்தில் அந்நிய ஆட்சி யின் அடிவேரும் இல்லாமல் செய்யப் போராடிய பூலித்தேவரின் முடிவு பற்றி உணர 'ஒருவர் பாக்கி இல்லாமல் கான் சாகிபு எல்லாப் பாளையக்காரர் களையும் அடக்கிவிட்டான்,' என்னும் வரலாற்றுக் குறிப்புக்களே உதவுகின்றன. ஆனால், 'பாளையக் காரர்களுள் இறுதியாக அடக்கப்பட்டவர் பூலித்தேவரே. 1761-ஆம் ஆண்டு மே மாதத்திலுங்கூடப் பூலித் தேவரின் மூன்று பெருங்கோட்டைகளைத் தான் பிடித்திருப்பதாகக் கான் சாகிபு கும்பினி அரசாங்கத்திற்கு எழுதுவதைக் காண்கிறோம்.[44]' என்று எடுத்துரைப்பதைப் படிக்கும்போது நம் உள்ளம், ஆயிரம் ஆயிரம் ஈட்டிகளால் குத்தப்

படுவது போன்ற வெட்க உணர்ச்சியையும் வேதனை நினைவையும் பெறத்தான் செய்கின்றது!

ஆயினும், கான் சாகிபு மட்டும் என்ன வாழ்ந் தான்! எந்தக் கும்பினி அதிகாரிகளுக்காக அவன் அல்லும் பகலும் பாடு பட்டானோ, எந்த அந்நிய ஆட்சியை மகிழ்விக்கத் தமிழகத்தின் சுதந்தர வீரர் களைச் சுட்டுச் சாம்பலாக்கினானோ, அந்த அந்நிய ஆட்சிக்குத் துணை புரிந்த ஆர்க்காட்டு நவாபுவே திண்டுக்கல் செல்லும் பாதையில் ஒரு மாமரத்தில் கோரமான முறையில் 1764-ஆம் ஆண்டு, அக்டோ பர் மாதம், 15-ஆம் நாள் அவனைத் தூக்கிலிட்டுக் கொன்றான்.[45] அவன் உடல் கண்ட துண்டமாக வெட்டப்பட்டு வெள்ளைக் கொடுங்கோலர்களால் நாடெங்கும் நகர்களெங்கும் மக்கள் கண்டு நடுங்கக் காட்சிப் பொருளாகக் கூரிய கம்பங்களில் குத்தி வைக்கப்பட்டது.

கான்சாகிபு கொல்லப்பட்டான். அவன் இறந் ததற்காக ஆர்க்காட்டு நவாபு ஆனந்தப்பட்டார். ஆங்கிலேயரோ, 'அவனைப் பிணமாக்கியதைவிடக் கைதியாகக் கூண்டில் அடைத்து உயிரோடு வாட்டாமற்போனோமே!' என்று எண்ணினர். மக்களோ, கம்மந்தான் சாவிற்காக ஒரு துளிக் கண்ணீரும் சிந்தவில்லை.

சென்னை அரசாங்கத்திற்குக் கான் சாகிபு எழு திய கடிதங்கள் அவன்பால் பூலித்தேவர் கோட்டை கள் சிக்கியதைத் தெரிவிப்பினும், சில ஆண்டுகளில் மீண்டும் தன்னாட்டு மறவர்களுக்குப் புத்துணர்வு

அளித்து வீரத்தலைவர் பூலித்தேவர் வெள்ளையரை எதிர்த்துக் கடும்போர் — இறுதிப்போர் — புரிந்த செய்தியைத் திருநெல்வேலிக் 'கெசட்டு'த் தெரிவிக்கிறது.[46] கான் சாகிபு கொலையுண்ட மூன்று ஆண்டுகட்குப் பின், 1767-ஆம் ஆண்டு நடைபெற்ற அவ் வீரப்போர் பற்றிய விவரங்களை அந்நூலில் உள்ள ஆங்கில வாசகத்தை அப்படியே தமிழாக்கிக் காண்போம்:[47]

'வாசுதேவநல்லூர், மேற்கு மலைத் தொடரின் அடிவாரத்தில் நிலவளமும் நீர்வளமும் நிறைந்த வயல்கள் சூழ அமைந்துள்ள அழகிய நகரம்........... ஆரம்ப நாட்களில் இந்த நகரம் நெற்கட்டுஞ்செவ்வல் தலைவருக்கே உரியதாயிருந்தது. 1760-ஆம் ஆண்டில் கான் சாகிபு இந்நகரையும் கோட்டையையும் கைப்பற்ற முயன்றான்; ஆனால், பலமாக முறியடிக்கப்பட்டான். இதையடுத்து இந்நகரம் ஆர்க்காட்டு நவாபுவின் கைக்கு வந்தது. ஆனால், இது எப்படி நடைபெற்றது என்பதைக் காட்டக்கூடிய ஆதாரங்கள் புலப்படவில்லை. ஆனால், நவாபுவின் ஆளுகை சிறிது காலத்திற்கே இருந்தது. ஏனென்றால், 1766-ஆம் ஆண்டில் மீண்டும் இந்த இடம் பழைய பாளையக்காரரின் உடைமையாய் இருப்பதைப் பார்க்கிறோம். 1767-ஆம் ஆண்டில் இந்த ஊரையும் கோட்டையையும் கைப்பற்றக் **கர்னல் காம்பெல்** ஒரு பெரும்படையுடன் பலத்த முற்றுகையிட்டான். ஒரு வாரம் முழுவதும் 650 கெஜ நீளமும் 300 கெஜ அகலமும் உடைய கோட்டை இடைவிடாமல் குண்டுகளால் துளைக்கப்

பட்டது. குண்டுகளால் துளைக்கப்பட்ட நேரத்தில் கோட்டைக்கு உள்ளிருந்த வீரர்கள் மிகுந்த வீரத்துடன் தங்களைத்தாங்களே காத்துக்கொண்டார்கள். அனல் கக்கும் குண்டுகளைச் சற்றும் பொருட்படுத்தாமலும் சாவுக்குச் சிறிதும் அஞ்சாமலும் கோட்டைகளில் ஓட்டைகள் ஏற்படாத வண்ணம் அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகள் கர்னல் காம்பெலை வியப்புக் கடலில் ஆழ்த்தின. மாற்றாரின் நெருப்பு மழையைச் சகித்துக்கொண்டு அவர்கள் சற்றும் அமைதியை இழக்காமல் சுறுசுறுப்போடு பனைமரத் துண்டங்களையும் வைக்கோற்போரையும் துணையாகக்கொண்டு கோட்டைகளில் அவ்வப்போது ஏற்பட்ட பிளவுகளை அடைத்த வண்ணம் இருந்தார்கள். ஒரு வாரப் பெருமுயற்சிக்குப் பின் ஒரு நாள் விடியற்காலையில் கோட்டையை அது வரை காத்த வீரர்கள் கோட்டையை விட்டு வெளியேறினார்கள். பலத்த மழை காரணமாக அவர்கள் மூன்று திசைகளில் ஓடி அருகிலிருந்த காட்டிற்குள் புகுந்தார்கள். அவர்களுக்குக் கர்னல் படையால் ஏற்பட்ட சேதம் மிகக் குறைவு.

கோட்டை அளவிற் சிறியதாய் இருந்தாலும், பலத்தில் பெரியது என்பது கர்னல் காம்பெலின் கருத்து. திருநெல்வேலி மாவட்டத்திலேயே மிக்க பலம் வாய்ந்த கோட்டையெனக் கர்னல் காம்பெலால் கருதப்பட்ட இக்கோட்டைக்கு அவ்வளவு பலம் இருந்ததற்குக் காரணம் இதன் இட அமைப்பேயாகும். கோட்டைக்கு 1300 கெஜத்தில் பெருங்காடு; அதற்குப் பின்னே உயர்ந்த மேற்கு மலைத்தொடர்.

காட்டுக்குள்ளே கணக்கற்ற மறவர்கள் குடி இருந்தார்கள். அவர்கள் முற்றுகையிடுகிறவர்கள் கண்ணிற்படாமல் தங்களைக் காத்துக்கொண்டு, முற்றுகையிடுபவர்களைக் கூர்ந்து ஆராயும் வாய்ப்பினைப் பெற்றிருந்தார்கள். அதனால், தக்க தருணத்தில் பாய்ந்து வந்து பகைவர்களை அழித்து ஒழிக்கும் ஆற்றல் அவர்களுக்கு இருந்தது. அடுத்த படியாக, அவர்கள் கருவேல முட்களை நன்றாகப் பயன்படுத்தி அரண் செய்யக் கற்றிருந்தார்கள். கருவேல முட்கள் நன்றாகப் பயன்படுத்தப்படுமானால் அவை கூர்மைப்படுத்திய கம்பிகளைவிடக் கொடியனவாகும். கோட்டைக்குத் தென்புறத்திலும் கிழக்குப்புறத்திலும் பேயாறு பாய்ந்தது. கோட்டைச் சுவர்கள் அளவு காரணமாகவும் கனம் காரணமாகவும் முக்கியமானவை அல்ல. அவை சுடுமண்ணால் ஆக்கப்பெற்றிருந்தன. சுவர்களின் அடிப்பகுதியின் அகலம் 15 அடி; மேல் செல்லச் செல்ல அகலம் 5 அடியாய்க் குறுகியது. இந்த நிலையில் அச்சுவர்கட்கிருந்த பலம் வியத்தற்குரியது. கர்னல் காம்பெலின் முற்றுகையின் போது ஓர் இடத்தில் 500 முறை சுட்டபொழுதும் ஒரு பிளவும் ஏற்படவில்லை. இக்கோட்டை தரை மட்டமாக்கப் பெற்று இப்போது ஒரு நூற்றாண்டிற்குமேல் ஆகி விட்டது.[48] கோட்டையிருந்த இடத்தில் புல் முளைத்து விட்டது. மழையிலும் வெயிலிலும் அழிவுற்ற நிலையிலும் கோட்டையின் அடி வரிசைக் கல் தெளிவாகத் தெரிகிறது! ஆம்! கோட்டை அழிந்தாலும், அது இருந்த இடமும் அடி வரிசைக்

கல்லும் அழியவில்லை. அப்படியே, பூலித்தேவர் வீர வரலாறும் இத்தனை நாள் மறைந்து மறக்கப் பட்டிருந்தாலும், என்றும் அழியாப் புகழ் வாய்ந்த பெருவரலாறு அதுவாகும். அதன் அடிப்படையும் ஆதாரமும் காலத்தின் கைகளாலும் அழிக்க முடியாதவை!

இன்று நாம் 'விடுதலைக்கு வித்திட்ட வீர வேந்தன்' என்று வாழ்த்தி வணங்கும் பெருந்தகை வீரபாண்டியக் கட்டபொம்மன். ஆனால், அவன் பாட்டனார் சுதந்தர விரோதியாய் இருந்த நாளிலேயே தமிழகத்தின் விடுதலைப்போரைத் தொடங்கி வைத்த மாணிக்கம்-மறவர் குல திலகம்-தமிழினத்தின் தனிப்பெரும்புகழ்-நம் வீரத் தலைவர் பூலித் தேவர். இச்சான்றோரின் வரலாறு பற்பல நூல்களிலும் அரசாங்க ஆவணங்களிலும் சிந்திச் சிதறிப் புதையுண்டு கிடக்கிறது. பூலித்தேவரைப் பற்றிக் குறிப்பிடும் பழமை சான்ற பெருநூல்களுள் சிறப்பானவை மூன்று. அவற்றுள் தலை சிறந்தது இராபர்ட்டு ஓர்ம்[49] என்பவரால் 'இந்துஸ்தானத்தின் வரலாறு' பற்றி 1000 பக்கங்கட்கு மேல் விரிவாக ஆராய்ந்து எழுதப்பெற்ற அரிய பெரிய நூல். இந் நூலில் பூலித்தேவரைப் பற்றி மட்டும் ஆசிரியர் 30 இடங்களில் குறிப்பிட்டுள்ளார். இந்நூல் இற்றைக்கு 196 ஆண்டுகட்கு முன்—கி. பி. 1764-ஆம் ஆண்டில்—தன் முதற்பதிப்பைக் கண்டது. இரண்டாவதாகக் குறிக்கத்தக்க நூல், வாணிகத் திறத்திலும் அரசியல் அறிவிலும் வரலாற்று உணர்ச்சியிலும் தலை சிறந்தவராய்ப் பதினெட்டாம் நூற்

ஞூண்டில் வாழ்ந்த பெருந்தமிழர் ஆனந்த ரங்கம் பிள்ளை பல நூறு பக்கங்களில் பைந்தமிழில் வரைந்துள்ள அரிய நாட்குறிப்பு.[50] பன்னிரண்டு தொகுதிகளாக ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப் பெற்றுள்ள இந்நூலில் பூலித்தேவர் கோட்டை பிடிபட்ட துயரச் செய்தியைக் குறிப்பிட்டுள்ளார் ஆனந்த ரங்கம் பிள்ளை. மூன்றாவதாகக் குறிப்பிடத் தக்க நூல், நூற்றெண்பத்தெட்டு ஆண்டுகட்கு முன் பாரிசில் பிரெஞ்சு மொழியில் வெளியிடப்பெற்ற ஓர் அரிய வரலாற்று நூல்.[51] அதன் ஆசிரியர் பூலித்தேவர் காலத்தில் தமிழகத்தில் இருந்தவர்; அவ்வமயம் நடைபெற்ற போர்களில் தொடர்பு கொண்டவர். அவர் தம் நூலில் பூலித்தேவரின் முடிவு பற்றிப் பின் வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

"பிரெஞ்சுக்காரர்களிடமிருந்து சென்னை மாநகர் காப்பாற்றப்பட்டதும் கான் சாகிபு மதுரைக் குத் திரும்பினான். அதன் பின் மாபூஸ்கான் பிடியை உதறி எறிந்தவர்களுள் மிகுந்த வல்லமை படைத்த வரும் பெரிய பாளையக்காரருமாகிய பூலித்தேவரை அடக்குவதில் அவன் ஈடுபட்டான். அவரை அடக்க அவனுக்கு மூன்று ஆண்டுகள் ஆயின."

[52] பன்னிரண்டு ஆண்டுக் காலம் விட்டுவிட்டுப் பரங்கியரை எதிர்த்துப் போரிட்ட வீரத்தலைவர் பூலித்தேவரின் அரசியல் வாழ்க்கையும், அதனினும் மேலாக அந்தச் சுதந்தர வீரரின் சொந்த வாழ்க்கையும் எவ்வாறு முடிந்தன என்பதைத் தெளிவாக அறிந்துகொள்ள இயலவில்லை. ஆனால்,

தம் அருமைக் கோட்டைகளையும் நாட்டின் மானத்தையும் காக்க வாழ்நாள் எல்லாம் நடத்திய வீரப் போரின் முடிவில் விழுப்புண் தாங்கிக் கடமையைச் செய்த களிப்போடு தமிழ்த்தாயின் மடியில் சாய்ந்திருக்க வேண்டும் அம்மாவீரர்!

பின்னாட்களில் நாட்டின் விடுதலைக்காக அரும்பாடு பட்ட வீரபாண்டியனையும் ஊமைத்துரையையும் மருது சகோதரர்களையும் போல, பூலித்தேவரும் தேச பத்தியையும் தெய்வ பத்தியையும் தம் இரு கண்களாகவே போற்றி வாழ்ந்தார். வரலாற்றுப் புகழும் இலக்கியச் சிறப்பும்[53] வாய்ந்த சங்கரநயினார் கோயில், பூலித்தேவரின் திருப்பணிகளைத்[54] திறையாகப் பெற்ற தலை சிறந்த தமிழ் நாட்டுக் கோயிலாகும். ஆம்! பூலித்தேவர் சங்கர நயினார் கோவிலில் குடிகொண்ட கூழைப்பிரானுக்கும் ஆவுடைநாயகிக்குமே கப்பம் கட்டினார்!

இத்தகைய பெரியோரின்—சான்றோரின்–வீர வாழ்வு கட்டபொம்முவும் திருவாங்கூராரும் துரோகம் இழைக்காதிருந்தால்–கான்சாகிபு போராட்டம் கன்னித் தமிழகத்தில் நடைபெறாதிருந்தால்—தமிழகத்தின் அரசியல் வரலாற்றையே வேறு விதமாக மாற்றியிருக்கக்கூடும். அஞ்சா நெஞ்சுரனும், தஞ்சமடைந்தோரைக் காக்கும் தறுகண்மையும், அரசியல் பேரறிவும், போர்த் திறனும், விடுதலை வேட்கையும் நிறைந்த பூலித்தேவர் வீர வரலாற்றைத் தமிழக விடுதலைப் போரின் முதல் ஏடு—ஏன்—இந்திய விடுதலைப்போரின் முதல் ஏடு என்று சொல்வதே

அறமாகும்.[55] ஏறத்தாழ இருநூறு ஆண்டுகட்கு முன்பே அந்நிய ஆட்சியினின்றும் தமிழகம் விடுதலை பெறப் போர் முரசு கொட்டிய அந்தப் பெருந்தகையின் புகழ், என்றும் அணையா மணி விளக்காகத் தமிழ் மக்களின் உள்ளக் கோயிலில் நின்று ஒளிர்வதாக!

## இணைப்பு—க

### 1. இராபர்ட்டு ஓர்ம் எழுதிய நூலினின்றும் (நான்காம் பதிப்பு-1861) எடுக்கப்பட்ட குறிப்பு:

*பக்கம்-565.*

*திருவாங்கூர் மன்னர் வடகரைப்பாளையக்காரருக்கும் பூலித்தேவருக்கும் எதிராக ஒரு பெரும்படை திரட்டி, கான்சாகிபுவோடு ஒத்துழைப்பதற்கு இசைந்தார்......கான்சாகிபு நேராக வடகரையை நோக்கிப் படையெடுத்துச் சென்றான். செங்கோட்டைக்கருகே அவன் சென்றதும் அவன் படைக்கு நிகரான ஒரு பெரும்படை அவனோடு சேர்ந்து கொண்டது. திருவாங்கூர் மன்னருக்குரிய படையில் பத்தாயிரம் பேர் இருந்தனர். அநேகமாக, கடந்த சில நூற்றாண்டுகளில் இந்த நாட்டில் திரட்டப்பட்ட மிகப்பெரிய படை இது என்று சொல்லலாம். வடகரையார் தம் காடுகளை ஒரு நாள் காத்துப் போர் புரிந்தனர். இதில் நூறு பேர் மாண்டனர். இரு தரப்பிலும் பலர் காயமடைந்தனர். ஆனால், இரவு தமது கோட்டையை விட்டு வெளியேறி நெற்கட்டுஞ்செவ்வல் பூலித்தேவரிடம் சரண் புகுந்தனர்..........*

*திருவாங்கூர்ப் படை கான் சாகிபு படையோடு தோளோடு தோள் சேர்த்து நின்றது. **1759**-ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், **6**-ஆம் தேதி பூலித்தேவரை அண்டியிருந்த பெருங்காடும் கோட்டையும் தாக்கப்*

பெற்றன. வீர மறவர் மூன்று நாட்கள் தம்மைக்காத்துப்போர் புரிந்தனர். பின்னர்க் கோட்டையையும் காட்டையும் விட்டு வெளியேறி நெற்கட்டுஞ்செவ்வலுக்குள் நுழைந்தனர். இவ்வெற்றிக்குப்பின் படைக்குவேண்டிய மருந்து இல்லாமையால், கான் சாகிபு மதுரை, பாளையங்கோட்டை, அஞ்சங்கோ முதலிய இடங்களிலிருந்து உதவியை எதிர்பார்த்திருந்தான். பழக்க வழக்கங்கள் காரணமாக வெறுப்புணர்ச்சி தோன்றியிருக்கும்பொருட்டுத் திருவாங்கூர்ப் படை தனியாக முகாமடித்திருந்தது. ஆனால், கான் சாகிபுவின் கண் பார்வையிலேயே அது இருந்தது. நவம்பர் மாதம் 20-ஆம் தேதி பட்டப்பகலில் ஐயாயிரம் அல்லது ஆறாயிரத்திற்கு மேற்பட்ட மறவர் திருவாங்கூராரைத் தாக்கினர். கான் சாகிபு கலக்கமுற்றுத் தன் குதிரைப்படைகளை முதலில் அனுப்பினான்; பின்னர், காலாட்படைகளையும் அனுப்பினான். ஆனால், அதற்குள் மறவர் கூட்டம் திரும்பிவிட்டது. மறவர்களின் விரைந்து செயல்படும் பண்பு காரணமாகவும் அவர்கள் நாட்டின் கரடுமுரடான தன்மை காரணமாகவும் அவர்களைத் துரத்திச் சென்றபோதும் ஒரு பயனும் ஏற்படவில்லை. மறவர் கூட்டம் திரும்புவதற்கு முன்பு திருவாங்கூராரில் நூறு பேரைக் கொன்றது; பலரைப் படுகாயப்படுத்தியது. இந்த நிகழ்ச்சிக்கு இரண்டொரு நாட்களுக்குப்பின் கான் சாகிபுவிற்கு அஞ்சங்கோவிலிருந்து படை உதவி கிடைத்தது; தூத்துக்குடியிலிருந்து இரு பீரங்கிகள் வந்து சேர்ந்தன. தன் நேசப்படைகளோடு கான் சாகிபு வாசுதேவநல்லூரை டிசம்பர்

மாதம் 4-ஆம் தேதி முற்றுகையிட்டான். இந்த வாசு தேவநல்லூர்க் கோட்டை, பூலித்தேவருடையது; நெற்கட்டுஞ்செவ்வல் கோட்டையைத் தவிர, பிற எல்லாக் கோட்டைகளைக்காட்டிலும் பலம் வாய்ந்தது. நெற்கட்டுஞ்செவ்வலிலிருந்து வாசுதேவநல்லூர்க் கோட்டை 20 மைல் வடமேற்கில் இருந்தது; ஊத்து மலையிலிருந்து அதே திசையில் 12 மைல் தொலைவில் இருந்தது.

வாசுதேவநல்லூர்க் கோட்டை மேற்குமலைத் தொடர்க்கு மூன்று மைல் தொலைவிற்குள் இருந்தது. கோட்டையைச் சுற்றி இரு மைல் நீளம் உள்ள காடு இருந்தது. இக்காடு மேற்கிலும் தெற்கிலும் ஆயிரத்து முந்நூறு கெஜம் பரப்புடையதாயும் வடதிசையில் இன்னும் அதிக பரப்புடையதாயும் அமைந்திருந்தது. கீழ்த்திசை வெட்டவெளியாய் விளங்கியது. வாசுதேவநல்லூரைச் சுற்றி எங்குப் பார்த்தாலும் நெற்களஞ்சியங்கள் நிறைந்திருந்தன. கோட்டைக்கு நாற்பது கெஜத் தூரத்தில் சில ஆயிரம் பேர்களின் குடியிருப்பு இருந்தது. அப் பேட்டை 1200 கெஜம் வடகீழ்த் திசையில் அமைந் திருந்தது. கோட்டையையும் பேட்டையையும் சுற்றிப் பலத்த முள் வேலி இருந்தது. கோட்டை அறுநூற்றைம்பது கெஜ நீளமும் முந்நூறு கெஜ அகலமும் கொண்டது; மண்ணாலாகியது எனினும், செங்கல்லாற் கட்டப்பட்டது போன்ற வன்மை வாய்ந்தது. கோட்டையில் நான்கு பெரிய சதுரமான கொத்தளங்கள் இருந்தன. இவை மூலைக்கொன்றாய் அமைந்திருந்தன. இன்னும்

பல கொத்தளங்கள் இப்பெருங்கொத்தளங்களுக்கு இடையே வட்டவடிவினவாயிருந்தன. ஒவ்வொரு கொத்தளமும் கோட்டையை உள்ளிருந்தும் புறமிருந்தும் காத்தற்குரிய உறுப்புக்களைப் பெற்றிருந்தது. கொத்தளங்களின் உச்சிக்குச் செல்லும் வழி செங்குத்தாயும் இரண்டடி அகலமே உள்ளதாயும் இருந்தது. கோட்டைச் சுவர்கள் அடியில் 15 அடி அகலமும் உச்சியில் 3 அடி அகலமும் உடையனவாயிருந்தன. கோட்டைச் சுவர்களின் உட்புறத்தைவிட வெளிப்புறம் செங்குத்தாய் அமைந்திருந்தது. இதனால் கோட்டை தாக்கப்படும் பொழுது தம்மைக்காத்துக்கொள்கிறவர் சுவரின் உச்சிக்கு விரைவில் ஏறிவிடலாம். கோட்டையின் உச்சியில் சிறு படைக் கருவிகளைப் பயன் படுத்துவதற்கான துளைகள் இருந்தன. ஆனால், பீரங்கியைப் பயன் படுத்துவதற்கான அமைப்பு ஏதும் இல்லை. இத்தகைய அமைப்பு வாசுதேவநல்லூர்க் கோட்டைக்கே பொருந்தும். மதுரை திருநெல்வேலியிலுள்ள கோட்டைகள், வேறான அமைப்புடையவை. ஆனால், மதுரையிலும் பாளையங்கோட்டையிலும் உள்ள கோட்டைகளைத் தவிர, பிற யாவும் மண்ணால் ஆகியவை. பொதுவாக இந்தியாவின் மலைகளிலும் காடுகளிலும் வாழும் மக்களிடம் காணப்பெறும் அழகின்மையும் தோற்றப் பொலிவின்மையும் ஒரு சிறிதும் திருநெல்வேலி மறவர்களிடம் இல்லை. அவர்கள் யாவரும் ஓங்கி உயர்ந்த அழகும் பொலிவும் நிறைந்த மக்கள். அவர்களுடைய படைக்கருவிகள் ஈட்டி, வேல், வில், அம்பு,

வளைதடி, துப்பாக்கிகள் முதலியனவே. எந்தக் கருவி இருந்தாலும் இல்லாவிட்டாலும், ஒவ்வொரு மனிதனும் எப்பொழுதும் வாளையும் கேடயத்தையும் தன்னுடனேயே வைத்திருக்கின்றான். போரின் போது வேறு வேறு படையினரும் வேறு வேறா கவே நின்று போரிடுவர். ஆனால், ஈட்டி எறி வோரே சிறந்த படையாற்றல் பொருந்தியவர். அவர்களே எல்லாப் போரையும் முன் நின்று நடத்துவார்கள். இந்தப் படைக்கருவி 18 அடி நீள முடையது. அவர்கள் இவ்வாயுதத்தின் நுனியில் குதிரை முடியைக் குஞ்சமாகக் கட்டிவிடுவார்கள்; குதிரைகளைத் தாக்கும்போது ஒரு சிறுமணியைக் கட்டுவார்கள். அவர்கள் முன்னதாக எவ்விதப் பயிற்சியும் இன்றியே அணி அணியாகத் திரண்டு விடுவார்கள். நெருக்கமாக அணி வகுத்து அவர்கள் கையிலே ஈட்டியை ஏந்திக்கொண்டு முன்னேறுவார் கள். கைகளிலே இருக்கும் ஈட்டியை லாகவமாக வும் முன்னோக்கியும் பிடித்துக்கொண்டிருப்பார்கள். வாசுதேவநல்லூரின் சிறப்புக் காரணமாகவும் அதைத்தாக்க வந்துள்ள பெரும்படை காரணமாக வும் கோட்டையைப் பிடிக்க ஆயிரக்கணக்கான மறவர் திரண்டனர். ஆனால், அவர்களுள் 800 அல் லது 900 தேர்ந்தெடுக்கப்பட்ட மனிதர்களே கோட் டைச் சுவர்களைக் காப்பதற்காக நியமிக்கப்பட்டார் கள். மற்றவரெல்லாம் காட்டுக்குள்ளேயே இருந் தனர். அங்கேயிருந்து அவர்கள் இரவும் பகலும் கூட்டம் கூட்டமாய் வந்து இரு முகாம்களையும் அச் சுறுத்தினர்; தாக்கினர்; மூன்று வேறுவேறான

நாட்களில் முகாம்களைப் பலமாகத் தாக்கினர். இப்படி விட்டுவிட்டு அவர்கள் தாக்கியதன் விளைவாகக் கோட்டையைத் தாக்குவதற்காகச் செய்யவேண்டிய ஏற்பாடுகள், வாசுதேவநல்லூரை முற்றுகையிட ஆரம்பித்து இருபது நாட்களாகியும் கூட டிசம்பர் 26-ஆம் தேதி வரையிலுங்கூடத் தாமதிக்கப்பட்டன. மதுரையிலிருந்து கான்சாகிபு கொண்டுவந்திருந்த 18 பவுண்டு பீரங்கி ஒன்றே சக்தி வாய்ந்தது. ஏனைய பீரங்கிகளெல்லாம் 6 பவுண்டும் அதற்குக் குறைவானவும் ஆகும். ஆனல், 18 பவுண்டு பீரங்கியைச் சுடுவதற்காகப் பயன்படுத்த ஆரம்பித்த ஒரே நாளைக்குள் மிக அதிகமாகச் சுட்டது காரணமாக அது வெடித்துவிட்டது. அப்படியே பீரங்கி மருந்தும் தீர்ந்துபோயிற்று; தற்காப்புக்காக ஒதுக்கப்பட்டது மட்டுமே இருந்தது. ஆனல், கோட்டை உச்சியில் ஒரு சிறு பகுதி சுடப்பட்டு பழுதுபடுத்தப்பட்டது. கான்சாகிபு இந்த நிகழ்ச்சிக்கு மறுநாள் கோட்டையைத் தாக்கி அழிக்க உறுதிகொண்டான். இரு தரப்பிலும் பெரும்படைகள் ஒன்ருேடொன்று மோதுதற்குத் தயாராயிருந்தன. போர் தொடங்கியதும் பூலித்தேவர் தேர்ந்தெடுக்கப்பட்ட மூவாயிரம் மறவர்களுடன் இரவோடு இரவாக நெற்கட்டுஞ்செவ்வலிலிருந்து புறப்பட்டுக் காட்டிற்குள்ளிருந்து திடீரெனக் கிளம்பி, கான் சாகிபுவின் முகாமின்மேல் பாய்ந்து காவலாளர்களை எல்லாம் துரத்தியடித்து, என்னென்ன நாசங்களை உண்டு பண்ண முடியுமோ அவ்வளவையும் உண்டுபண்ணினர். கான்சாகிபு

ஒரு பெரும்படையைக் கொண்டு பூலித்தேவரின் படையைத் தாக்கினான்; ஆனால், கோட்டைக்குள் இருந்த படைஞர் கூட்டம் பூலித்தேவரின் வெற்றியால் இரட்டிப்பு மகிழ்ச்சி அடைந்தது; வெற்றி ஆரவாரம் புரிந்தது; வெண்சங்கம் ஊதியது. இந்நேரத்தில் எல்லா மறவரும் சொல்லி வைத்தாற் போலக் காடுகளிலிருந்து திரண்டு பாய்ந்து வந்தனர்; பல்வேறு கூட்டங்களாகப் பிரிந்து பல்வேறு இடங்களிலும் தாக்கினர். கான்சாகிபு படை துரத்தத் துரத்த, அவர்கள் மேலேறிச் சாடினார்கள். அவர்கள் உள்ளத்தின் உறுதி காரணமாக அன்று மாலை வரையிலும் கோட்டை பிடிபட்டுவிடாமல் காப்பாற்றினர். பொழுது சாய்ந்ததும் காட்டிற்குள் நுழைந்து மறுபடியும் கான் சாகிபு படையினரும் திருவிதாங்கூர்ப் படையினரும் கோட்டையைத் தாக்காமல் இருப்பதற்கான காரியங்களையெல்லாம் செய்யக் காத்திருந்தனர். ஆனால், தற்காப்புக்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த தளவாடங்கள் பெரும்பாலும் தீர்ந்துவிட்டன. அந்நிலையில் கோட்டைக்கு முன் இருப்பது பெரிய ஆபத்து எனக்கருதிய கான்சாகிபு முற்றுகையைக் கலைத்துவிட்டு வெளியேறினான். அவனுடைய படையையும் திருவாங்கூரார் படையையும் சார்ந்த 200 பேர் கொல்லப்பட்டனர். ஆனால், எதிர்தரப்பில் இன்னும் பலர் இறந்தனர். மறுநாள் கான் சாகிபு சிறிது தூரம் வரை கூடச் சென்று திருவாங்கூர்ப் படையை வழியனுப்பி வைத்தான். அவர்கள் செங்கோட்டைக் கணவாய் வழியாகத் தங்கள் நாட்டிற்குத் திரும்பினார்கள். கான் சாகிபு

வும் தன் படையோடும் தொண்டைமான் இராமநாத புரம் சீமையாரால் கடனாகக் கொடுக்கப்பட்ட படைக ளோடும் திருநெல்வேலிக்குத் திரும்பினான்.

## II. திரு. பேட்டி, I. C. S., என்பவர் 1917-ஆம் ஆண்டு வெளியிட்ட 'திருநெல்வேலிக் கெசட்டு' என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்ட குறிப்புக்கள் :

பக்கம் *70-71-* (*1*)

இறுதியாக 1755-ஆம் ஆண்டு இரண்டாயிரம் சிப்பாய்களையும் ஐந்நூறு ஐரோப்பியர்களையும் கொண்ட படை உருவாக்கப்பெற்றது. அதற்குக் கர்னல் ஹீரான் தலைவனாக நியமிக்கப்பட்டான். ஆர்க்காட்டு நவாபுவின் அண்ணன் மாபூஸ்கான் சுதேசிப்படைகளின் தலைவனாக நியமிக்கப்பட்டான். மதுரை தாக்குதலின்றியே வீழ்ந்தது; இராமநாத புர அரசர் இலங்கைக்கு எதிராகத் தம் நாட்டில் அமைந்திருந்த இரு துறைமுகங்களைக் கும்பினிக்குக் காணிக்கையாக்கி, தமது பணிவைப் புலப்படுத்தி னார். உடனே ஹீரான் கோவில் குடியைக் கைப் பற்றப் புறப்பட்டான். மதுரையின் கவர்னர் அந்தக் கோயில் கோட்டையில் அடைக்கலம் புகுந் திருந்தான். மேலும் தெற்கு நோக்கிச் சென்று கர்னல் ஹீரான் திருநெல்வேலியைக் கைப்பற்றி னான். அங்கு அவனுக்கு எவ்வித எதிர்ப்பும் இல்லை. திருநெல்வேலியிலும் சுற்றியுள்ள பகுதியிலுமுள்ள குத்தகைக்காரர்கள் தங்கள் பணிவைப் புலப்படுத் தினார்கள். கட்டபொம்மு நாயக்கரின் பலம் வாய்ந்த

இருப்பிடத்தைத் தாக்குவதற்கான முயற்சி செய்யப்பட்டது. ஆனால், அதற்குள் ஹீரானின் படை முழுவதும் திருச்சிக்கு அழைக்கப்பட்டுவிட்டது. எனினும், ஒரு படைப்பிரிவு ஆரல்வாய்மொழி மலைத்தொடருக்கு 6 மைல் தொலைவிலுள்ள நிலக்கோட்டை என்னும் கோட்டையைத் தாக்க அனுப்பப்பட்டது. இந்த இடம் மிகக் கோரமான முறையில் கைப்பற்றப்பட்டது. இங்கேயிருந்த ஆண்கள் பெண்கள் குழந்தைகள் உட்பட எல்லா மக்களும் வாளாலே வெட்டித் தீர்க்கப்பட்டார்கள். மதுரைக்குத் திரும்பும் பாதையில் கர்னல் ஹீரான் சங்கரநயினார் கோயில் பகுதியின் பெரும்பாளையக்காரரான பூலித்தேவரின் தலைமையிருப்பிடமாகிய நெற்கட்டுஞ்செவ்வலைத் தாக்கினான். ஆனால், அந்த முயற்சி தோல்வியடைந்தது. ஹீரானின் படை மதுரைக்குத் திரும்பியது.

பக்கம் 376. (2)

1755-ஆம் ஆண்டு கர்னல் ஹீரான் படையெடுத்த பொழுது எட்டையபுரத்தாரிடமிருந்தும் பாஞ்சாலங்குறிச்சியாரிடமிருந்தும் கப்பப் பணம் கேட்கப்பட்டது; நன்னடத்தைக்கான ஆள் பிணையும் கேட்கப்பட்டது. அதற்கு இணங்கி எட்டையபுரத்தாரும் பாஞ்சாலங்குறிச்சியாரும் கப்பம் கட்டினர்; ஆள் பிணையும் கொடுத்தனர். இக்காரணத்தினாலேயே 1756-ஆம் ஆண்டில் பூலித்தேவர் ஒரு பெருங்கூட்டணியை உருவாக்கிய நேரத்தில் அதில் எட்டையபுரம் பாஞ்சாலங்குறிச்சித் தலைவர்கள் சேராமலிருந்தார்கள் என்பது தெளிவு.

பக்கம் 387—8. (3)

வரலாறு அறியப் பாஞ்சாலங்குறிச்சியின் பழமையான பாளையக்காரர் அரியணையிலமர்ந்தது 1709-ஆம் ஆண்டில். இவருக்கு எதிராகவே 1755-ஆம் ஆண்டில் பல்வேறு படையெடுப்புக்களுக்கும் தலைமை தாங்கும் முதல் படையெடுப்புத் தொடங்கியது. கர்னல் ஹீரானே இப்படையெடுப்பின் தலைவன். இவனே திருநெல்வேலியுள் நுழைந்த முதல் பிரிட்டிஷ் தளபதி. பாஞ்சாலங்குறிச்சியை எதிர்த்துக் கர்னல் ஹீரான் படையெடுத்தது அரை மனத்தோடு செய்த செயலே. பாஞ்சாலங்குறிச்சியை அவன் படைகள் நெருங்கவே இல்லை. படை தன் திசை நோக்கி வந்ததும் கட்டபொம்மு நாயக்கன் தன் கப்பப் பணத்தில் ஒரு பகுதியை அனுப்பிவிட்டான். இதை வாங்குவதுதான் அப்படையெடுப்பின் நோக்கம். எனவே, தொகை கிடைத்ததும் துருப்புக்கள் திரும்பின.

பக்கம் 72—3. (4)

மேற்குத்திசைப் பாளையங்களின் தலைவராகிய பூலித்தேவர் கிழக்குத்திசைப் பாளையங்களின் தோழர்களோடு சேர்ந்து ஒரு பெருங்கூட்டணியை உருவாக்க முயன்றார். அப்போது கிழக்குத்திசைப் பாளையங்களின் தலைவன் கட்டபொம்மு நாயக்கன். அவனும் அவன் ஆட்சிக்குட்பட்டவனாகிய எட்டையபுரத்தானும் இக்கூட்டணியில் சேர மறுத்தனர். இதற்கு மாறாக மதுரை பாளையக்காரர்கள் கூட்டணியில் சேர உறுதி தெரிவித்தனர். ஒரு

பெருங்கூட்டணி கும்பினியைப் பயமுறுத்திய வண்ணம் இருந்தது. திருநெல்வேலி வடபகுதியின் பலம் வாய்ந்த இருப்பிடமாகிய சீவில்லிபுத்தூரைப் பிடிப்பதிலேயே கூட்டணியாளர் கவனம் செலுத்தினர். மாபூஸ்கானுல் தென்பாண்டிப் பாளையங்களைக் காக்க வைக்கப்பட்டிருந்த அப்துல் ரஹீம் தோற்கடிக்கப்பட்டான். சீவில்லிபுத்தூர் கூட்டணியாளரிடம் சிக்கியது. ஒன்றுபட்ட பாளையக்காரர்களின் கூட்டணியில் இச்சமயத்தில் இருபத்தையாயிரம் பேர் காலாட்படையில் இருந்தனர். ஆயிரம் பேர் குதிரைப்படையிலிருந்தனர். இதற்குள்ளாக மாபூஸ்கான் கட்டபொம்ம நாயக்கனையும் எட்டைய புர நாயக்கனையும் விலை பேசி வாங்கிவிட்டான். திருநெல்வேலிக்கு 7 மைல் தொலைவில் இரு தரப்பாருக்குமிடையே பெரும்போர் நிகழ்ந்தது. பூலித்தேவரும் அவர் தோழர்களும் தோற்கடிக்கப்பட்டார்கள்.

பக்கம் 408 (5)

திருநெல்வேலி மாவட்டத்தின் வடமேற்கு மூலையிலிருப்பது சங்கரநயினூர் கோயில். எல்லாத் தாலூக்காக்களையும்விட மிகவும் கிராமாந்தரமாய் இருந்தது இதுவே. 17-ஆம் நூற்றுண்டிலும் 18-ஆம் நூற்றுண்டிலும் மறவர் குலப் பாளையக்காரர்கள் தங்கள் பலம் வாய்ந்த இருபிடமாகச் சங்கர நயினூர் கோயிலைக்கருதித் தங்கள் குடியின் பழமையான சுதந்தரம் பாழாகாமல் காப்பாற்ற மிக உறுதியோடு போராடியதற்குப் பெருவசதி அளித்தவை தனித்து நின்ற இப்பகுதியின் நில அமைப்பும் இப்

பகுதியில் நிறைந்திருந்த காடுகளும் மலைகளுமே யாகும். சங்கர நயினார் கோவில் தாலூக்கா முழுவதி லும் மறவர் தலைவர்கள் நிறைந்திருந்தார்கள். இம்மற வர் தலைவர்கள் அனைவரிலும் தலை சிறந்தவராய் விளங்கிய பூலித்தேவர் இப்பகுதியின் நடுவிடத்தைத் தம் தலைமையிடமாகப் பெற்றிருந்தார். இவரைச் சுற்றிலும் சொக்கம்பட்டி, ஊத்துமலை, தலைவன் கோட்டை, சிவகிரி, சேத்தூர் ஆகிய பாளையங்களின் தலைவர்கள் துணைவர்களாயும் தோழர்களாயும் இருந் தார்கள். இவர்கள் யாவரும் மறவர்கள்: 18-ஆம் நூற்றாண்டு வரலாற்றில் சிறப்பு வாய்ந்த தலைவர்கள்.

பக்கம் 420 (6)

**வாசுதேவநல்லூர் :**

தொன்மையாய் இந்த இடம் நெற்கட்டுஞ் செவ் வல் பாளையக்காரருக்கு உரிமையானது. இந்நெற் கட்டுஞ்செவ்வல் கோட்டையை 1760-ஆம் ஆண்டில் கான் சாகிபு கைப்பற்ற முயன்ற போது அவன் படுதோல்வி அடைந்தான். இதையடுத்து இவ்விடம் ஆர்க்காட்டு நவாபுவின் கைக்கு வந்தது. ஆனால், இது எப்படி நடைபெற்றது என்பதைக் காட்டுவதற் கான ஆதாரம் இப்போது ஏதும் இல்லை. ஆனால், இந்த இடத்தில் நவாபுவின் ஆளுகை மிகக்குறைந்த காலத்திற்கே இருந்தது. ஏனென்றால், 6 ஆண்டு களில் மறுபடியும் இந்தப்பாளையக்காரரின் கைக்கே வந்துவிட்டது. 1767ல் கர்னல் காம்பெல் இந்த இடத் தைப் பிடிக்க ஒரு பெரும்படையின் துணை கொண்டு முற்றுகையிட்டான். 650 கெஜ நீளமும்

300 கெஜ அகலமுமுடைய இக்கோட்டை ஒரு வாரம்வரை குண்டுகளால் இடைவிடாமல் துளைக்கப் பட்டது. இந்தக் குண்டு மாரியினின்றும் தங்களைக் காத்துக்கொள்ளக் கோட்டைக்குள் இருந்தவர் கள் போராடிய முறையினைக் கண்டு கர்னல் காம் பெலே பெரிதும் வியந்தான். சாவுக்கு அஞ்சாது, குண்டுகளின் நெருப்பு மழையையும் பொருட்படுத் தாது, அமைதியாகவும் சுறுசுறுப்பாகவும் பனைமரத் துண்டுகளையும் வைக்கோலையும் கொண்டு கோட்டை யில் ஏற்பட்ட ஒவ்வொரு பிளவையும் வீரர்கள் இடைவிடாமல் அடைத்து அடைத்து ஒழுங்குபடுத் தியதைக் கண்டு, அவன் அடைந்த வியப்பிற்கு ஓர் அளவில்லை. ஒரு வாரப் போராட்டத்திற்குப் பின் ஒரு நாள் விடியற்காலை கோட்டைக்கு உள்ளிருந் தவர் கோட்டையை விட்டு வெளியேறினர். கடுமை யான மழை அப்பொழுது பெய்தது. அச்சமயத்தில் அவர்கள் அருகிலிருந்த காட்டிற்குள் மூன்று திசை களில் சென்று நுழைந்தார்கள். அப்போது அவர் கள் முற்றுகையிடுவோரால் சுடப்பட்டார்கள். ஆனால், அவர்கள் அடைந்த இழப்புச் சிறியது.

வாசுதேவ நல்லூர்க்கோட்டை அளவிற் சிறியது. ஆனால், திருநெல்வேலி மாவட்டத்திலேயே மிக்க பலம் வாய்ந்த கோட்டையென அது கர்னல் காம்பெ லால் கருதப்பட்டது. அதனுடைய பலம் பெரிதும் அது அமைந்திருந்த இடத்தையே பொறுத்திருந் தது. கோட்டைக்கு மேற்கிலும் தெற்கிலும் 1300 கெஜத்தொலைவில் அடர்ந்தகாடு இருந்தது. அதற்கு அப்பால் மேற்கு மலைத்தொடர் தலை நிமிர்ந்து நின்றது. இந்தக் காடுகளில் மறவர் பெருங்கூட்டம்

நிறைந்திருந்தது. முற்றுகையிடுவோர் கண்ணில் படாமல் அவர்கள் செயல்களைக் கவனித்துச் சரியான நேரத்தில் அவர்கள்மேல் பாய்ந்து தாக்குவதற்கு இக்காடு மறவர்களுக்குப் பெருந்துணை புரிந்தது. இக்கோட்டைக்கு இரண்டாவதாய் இருந்த பெரிய அரண் நஞ்சு நிறைந்த கருவேல முட்களாலாகிய பலம் வாய்ந்த முள்வேலி ஆகும். இக்கருவேல முட்களைக்கொண்டு திறமையாக முடைந்து வேலியிட்டால் அது கூரிய கம்பிகளாலாகிய வேலியைக் காட்டிலும் கடப்பதற்கு அரிதாக அமையும். கோட்டையின் தெற்குக் கிழக்குச் சுவர்களுக்கு அருகிலேயே பேயாறு பாய்ந்தது. இது இன்னொருவகைப் பாதுகாப்பாகக் கோட்டைக்கு அமைந்தது. கோட்டைச் சுவர்கள் அவற்றின் அளவு காரணமாகவும் பருமை காரணமாகவும் பெயர் பெற்றன அல்ல. சுவர்கள் சுடுமண்ணாலாகியவை. அவற்றின் அடித்தளத்தின் அகலம் 15 அடி. மேல் உச்சியின் அகலம் 5 அடி. கர்னல் காம்பெலின் முற்றுகையின் போது இந்தக்கோட்டையில் ஓர் இடம் ஐந்நூறு முறை குண்டுகளால் தாக்கப்பட்டது. ஆனால், கோட்டையில் ஒரு சிறு பிளவும் ஏற்படவில்லை. கோட்டையின் உறுதியை இது காட்டும். இந்தக் கோட்டை தரை மட்டமாக்கப்பட்டு ஒரு நூற்றாண்டிற்குமேல் ஆகிறது. கோட்டை இருந்த இடத்தில் புல்லும் பயிரும் முளைத்துவிட்டன. வெயிலில் காய்ந்தும் மழையில் மட்கியும் பல்லாண்டுகளாகப் பாழ்பட்ட நிலையில் கிடந்தாலும் கோட்டையினடித்தளத்தில் அமைந்திருக்கும் சுடுமண் வரிசை இன்றும் தெள்ளத்தெளியத் தெரிகிறது.

III. அறிஞர் எஸ். சி. ஹில் அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய 'யூசப்கான்—புரட்சித் தளபதி' (1914) என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்ட குறிப்பு:

பக்கங்கள்: *39—40*

*இதற்கிடையில் தக்காணத்தில் புஸ்ஸியின் வெற்றிகளைக் கண்டு கிழக்கிந்தியக் கும்பெனி கலக்க மடைந்துகொண்டிருந்தது. ஓரளவு இக்காரணம் பற்றி என்றாலும் பேரளவு ஹீரானின் படை யெடுப்புத் தன் செலவுகளைத் தானே சமாளித்துக் கொள்ள முடியவில்லை என்பதற்காக ஹீரானைத் திருப்பி அழைக்கக் கும்பினி முடிவு செய்தது. மே மாதம், 2-ஆம் தேதி அவன் மதுரைக்குப் புறப் பட்டான். மூன்றே நாள் படைச் செலவில் அவன் முக்கியமான பாளையக்காரராகிய பூலித்தேவர் எனப்படுபவரின் தலைமை நகரமாகிய நெற்கட்டுஞ் செவ்வலுக்கு வந்துவிட்டான்.*

*"கல்லாலும் மண்ணாலும் உறுதியாகக் கட்டப் பட்டிருந்த இக்கோட்டை ஒரு திறந்த சமவெளியில் அமைந்துள்ளது.[1] பீரங்கி சுடும் தொலைவில் அதை மறைத்துக் காக்கும் வகையில் ஒரு சிறு குன்றைத் தவிர வேறு எதுவும் அருகில் இல்லை. கோட்டையின் ஒரு புறத்திற்கு நேர் இணையாக அறுநூறு கெஜத் தூர அளவுள்ள கண்மாய் (ஏரி)க் கரையொன்று அமைந்து கிடந்தது. மேற்குறிப்பிட்ட குன்றின் பின்னால் எங்கள் படைகள் முகாமிட்டிருந்தன. எதிரிப்படைகளைத் திடுக்கிடச் செய்யும்பொருட்டுச் சில பீரங்கிகளையும் காலாட்படை வீரர்களையும்*

கொண்ட ஒரு முகாம் கண்மாய்க்கரைமேல் நிறுத்தப்பட்டது. கர்னல் ஹீரான் தன் வக்கிலை (இருமொழியாளன் அல்லது துவிபாஷியைப்) பூலித்தேவரிடம் அனுப்பி அவர் ஆற்ற வேண்டிய கடமையையும் கேட்டிருந்த பணத்தைக் கொடுக்க வேண்டும் என்பதையும் தவறினால் அவர் நகரம் தூள் தூளாக்கப்படும் என்பதையும் எடுத்துரைக்கச் செய்தான். பூலித்தேவர் பயமுறுத்தல்களைக் கண்டு நகைத்தார். அவருக்கு எங்களிடம் பெரிய பீரங்கி எதுவும் இல்லை என்பது தெரியும். மேலும், கர்னலின் வேலையாள், கர்னல் தம் எசமானர்களால் திரும்ப அழைக்கப்பட்டு விட்ட தால் நிச்சயமாக அதிகநாள் அங்குத் தாமதிக்க மாட்டார் என்ற செய்தியைப் பூலித்தேவரிடம் கூறத் தயங்கவில்லை. இதன் பயனைகப் பேரளவு போர்த் தளவாடங்களைச் செலவிட்ட பின்னும் நம்முடைய ஆட்களில் பலர் மண்டையில் அடித்துத் தள்ளப்பட்ட பின்னும் கர்னல் நகரத்துள் இருந்த பூலித்தேவருக்கு மிகச் செட்டாக ஓர் இறுதிச் செய்தி விடுத்தார். அதில் அந்த இடத்திலேயே இருபதாயிரம் ரூபாய் தந்துவிட்டால் உடனே தாம் திரும்பிவிடுவதாகக் கூறப்பட்டிருந்தது. இச் செய்தியைப் பூலித்தேவரிடம் கொண்டு போனவர் கள், 'கர்னல் தமது விருப்பம்போல எதையும் செய்யலாம்; அவ்வளவு பெருந்தொகையைத் திரட்ட முடியாது; ஒரு ரூபாய் கூடத் தரக்கூடாது என்று உறுதி கொள்ளப்பட்டுள்ளது,' என்ற மறுமொழி யைக் கொண்டு வந்தார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில்

எங்கள் படைக்கு எல்லா வகையான பொருள்களும் தேவையாய் இருந்தன. அதன்பொருட்டு வெறுப் புற்றிருந்தவர்கள் எந்த நாளும் எந்த மணியும் கலகம் புரியக் காத்திருந்தார்கள். இதனால் மேற்கொண்டு எந்த முயற்சியும் பூலித்தேவர் நகரத்தைப் பொறுத்த வரையில் செய்யாமல், மதுரை நோக்கிப் புறப்படக் கர்னல் உறுதி கொண்டார். படை மே-20-இல் மதுரை சேர்ந்தது."[2]

[1] "பீரங்கிகள் ஓடிவிட்ட டச்சுப் படையினரால் தரப் பட்டன." ஹீரான் - 1755 - மே-14-இல் கும்பினிக்கு எழுதிய கடிதம்; இராணுவ ஆலோசனைகள்-1755-மே-30.

[2] படையெடுப்புப்பற்றி ஜோசப்பு ஸ்மித்தின் அறிக்கை. ஓர்ம் சுவடிகள்-இந்தியா - III-பக். 610.

ஹீரான் இதே நாளிட்ட தமது கடிதத்தில் மே-21 என்று கூறுகிறார். —இராணுவ ஆலோசனைகள்—1755—ஜூன்—4.

## IV. பேராசிரியர் C. S. சீனிவாசாசாரியார் அவர்கள் எழுதிய 'ஆனந்த ரங்கப் பிள்ளை' என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்ட குறிப்பு:

*பக்கம்: 355.*

*கர்னல் ஹீரானுக்குத் திருச்சிக்குத் திரும்புக என்ற உத்தரவு கிடைத்திருந்தது என்றாலும், அவன் மாபூஸ்கானின் வேண்டுகோளுக்கு இணங்கி, தான் செல்ல வேண்டிய வழியினின்றும் திரும்பி, பூலித்தேவரை அவர் கோட்டையிலே தாக்கினான். காரணம்,* பாளையக்காரர்களுள் அவர் ஒருவரே பயந்து போகாமல் இருந்தவர் *என்பதே. ஆனால், பூலித்தேவர் கோட்டையைப் பெரிய பீரங்கியைக் கொண்டு தாக்கியும் கைப்பற்ற முடியாது என்பதை அறிந்ததும் கர்னல் ஹீரான் மதுரைக்குத் திரும்பினான். பின்னர் 1755-ஆம் ஆண்டு ஜுன் மாதம் திருச்சிராப்பள்ளிக்குத் திரும்பினான்.*

## இணைப்பு—௨

## I. An extract from Robert Orme's "History of the Military transactions of the British Nation in Indostan" (1861)

P. *565.*

The king (of Travancore)..........agreed to act with a considerable force in conjunction with Mahomed Issoof against Vadagherri and the Puli Tevar..........He (Mahomed Issoof) then proceeded directly against Vedagherri: When arrived near Shencottah, he was joined by an army full as large as his own, consisting of 10,000 more of the king's troops. ..........This was perhaps the greatest force that had been assembled for some centuries in this country. Vadagherri defended his woods for a day, in which about 100 men were killed and wounded on both sides; but in the night abandoned his fort, and escaped away to the Puli Tevar at Nellitangaville.

As soon as this agreement was settled, the Travancore moved again in conjunction wlth his troops. On the 6th of November (1759), they infested the wood and fort of Easaltever, which was one of the dependencies of the Puli Tevar. The colleries defended the wood three days,

and then abandoned both; and retired to Nellitangaville. After this success, the want of ammunition obliged Mahomed Issoof to remain until he received supplies from Madura, Palamcotah, and Anjengo. The army of Travancore, to prevent disgusts from disparity of customs, encamped separately, but in sight of Mahomed Issoof's; and on the 20th of November, a body of 5 or 6000 colleries attacked the camp of the Travancores in open day. Mahomed Issoof, on the first alarm, sent his horse, and followed with his Sepoys and other foot; but the colleries retreated before they came up, and their nimbleness, with the ruggedness of the country, rendered the pursuit of little avail. They had killed and wounded 100 of the Travancores, before they went off. A day or two after this skirmish, Mahomed Issoof received three howitzes, with some stores, and a supply of ammunition from Anjengo; and the two six pounders with their shot likewise came up from Tutucorin; he then moved with his allies, and on the 4th of December set down before Washinelore, another fort dependent on the Pulitevar, much stronger than any he had excepting Nellitangaville, from which it is situated twenty miles to the N. W. and twelve in the same direction from Outamaly.

Washinelore stood within three miles from the great range of mountains, at the foot of which ran a thick wood, extending two miles into the plain, and within 1300 yards of the west and south sides of the fort; but turned to a much greater distance on the north, and to the east the plain was open, and everywhere covered with profuse cultivation. A very extensive pettah, residence of some thousand inhabitants, commenced within forty yards, and extended 1200 to the N. E. of the walls: a thick thorn hedge, with barriers, surrounded both the pettah and the fort. The extent of the fort was 650 by 300 yards: it was of mud, but almost as hard as brick; it had four large square towers, one at each angle, and several smaller, which were round, between. Every tower was a separate redoubt, enclosed by a parapet, to command within as well as without the fort: the access to the tower was a steep ramp, only two feet broad, the entrance a narrow wicket in the parapet; the curtain between the towers had no parapet and was only a rampart sloping on both sides from a base of 15 feet to 3 at top; but the slope from within was much less sharp than from without, so that, if assaulted, the defenders might easily run up to the top. The parapets of the towers have circular holes for the use of small arms, but no openings prepared for cannon of which

there was not a single piece in the fort. This description only suits Washinelore, for the other forts in the Madura and Tinivelly countries have parapets with loop-holes to their ramparts, as well as to their towers; but all are of earth, excepting Madura and Palamcotah. The colleries on this side of the Tinivelly country, possess nothing of the ugliness or deformity which generally characterize the inhabitants of the hills and wilds of India. They are tall, well-made, and well-featured. Their arms are lances and pikes, bows and arrows, rockets, and match-locks, but whether with or without other weapons, every man constantly wears a sword and shield. In battle, the different arms move in distinct bodies; but the lancemen are rated the most eminent, and lead all attacks. This weapon is 18 feet long; they tie under the point a tuft of scarlet horse-hair, and when they attack horse, add a small bell. Without previous exercise, they assemble in a deep column pressing close together, and advance at a long steady step, in some degree of time, their lances inclining forward, but aloft, of which the elasticity and vibration, with the jingle, dazzle and scare the cavalry, and their approach is scarcely less formidable to infantry not disciplined with fire-arms. The importance of Washinelore, and the great force which was come against it, brought

there was not a single piece in the fort. This description only suits Washinelore, for the other forts in the Madura and Tinivelly countries have parapets with loop-holes to their ramparts, as well as to their towers; but all are of earth, excepting Madura and Palamcotah. The colleries on this side of the Tinivelly country, possess nothing of the ugliness or deformity which generally characterize the inhabitants of the hills and wilds of India. They are tall, well-made, and well-featured. Their arms are lances and pikes, bows and arrows, rockets, and match-locks, but whether with or without other weapons, every man constantly wears a sword and shield. In battle, the different arms move in distinct bodies; but the lancemen are rated the most eminent, and lead all attacks. This weapon is 18 feet long; they tie under the point a tuft of scarlet horse-hair, and when they attack horse, add a small bell. Without previous exercise, they assemble in a deep column pressing close together, and advance at a long steady step, in some degree of time, their lances inclining forward, but aloft, of which the elasticity and vibration, with the jingle, dazzle and scare the cavalry, and their approach is scarcely less formidable to infantry not disciplined with fire-arms. The importance of Washinelore, and the great force which was come against it, brought